# நேதாஜி

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்





உரிமை பதிவு] கலைமகள் காரியாலயம் [விலை ரு. 1/8
மயிலாப்பூர் :: சென்னை

# முகவுரை

சிவாஜியின் சீரிய தோழன் நேதாஜி. குதிரைப் படையின் உயரிய தலைவனுமாம். மகாராஷ்டிரப் பேரரசு காண்பதில், சிவாஜிக்கு உற்ற துணையாக நின்றவனுமாம். ஆபத்தான சமயங்களிலெல்லாம் சத்திரபதி சிவாஜிக்கு இவன் தலைகொடுத்திருக்கிறான்.

தனது சமூகம் சீர்பெறவே நேதாஜி உழைத்து வந்தான். சிவாஜியின் தாயார், இவனை நேதையா என்று பரிவுடன் அழைக்கலானாள். மகாராஷ்டிர சமூகமும் இவனைப் போற்றலாயிற்று.

சிவாஜியின் வீரத் தோழர்களிலே, மகாராஷ்டிரத் தின் மாண்புமிக்க மைந்தரிலே, திலகம் போல்வான் அவன். ஆதலின், நேதாஜி என்னும் பெயர், பெருமைக்கும் பண்புக்கும் இடமாயிற்று.

இதனைக் கருத்தில் கொண்டே, சுபாஷ் சந்திர போஸுக்கு 'நேதாஜி' என்னும் பட்டம் சூட்டினர் நம்மவர். அத்தகைய நேதாஜியின் சரிதம் இது.

அந்நாளில் இவன் பகைவரான அந்நியர் பலரும் இவனது வீரதீரத்தை வியந்து புகழ்ந்து பேசியுள்ளனர்.

சமூகத்துக்கும் தேசத்துக்கும் பயன்பட விரும்பும் இளைஞருக்கு நேதாஜியின் சரிதம் ஒரு வழிகாட்டி யாகும்.

இங்ஙனம்

15-7-47,
சென்னை.

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்

## பொருளடக்கம்

# நேதாஜி

## 1

## மங்கை பறி

பரிதிக் கடவுள்—சூரிய பகவான்—பாருலகை வலம் வந்து, மலை வாயில் விழும் வேளை; ஆடை அணி பலவும் தரித்த மணமகள் ஒருத்தி மகிமையுடன் மேனவில்-பல்லக்கில்-அமர்ந்து சென்றனள். அந்தி படுமுன் அக் கன்னிகையைக் காந்தனது வீடு சேர்க்கக் கருதிய மகாராஷ்டிரப் பரிவீரர் பதின்மர் மகாபலேசுவரமலையருகே பரபரப்புடன் போகாநின்றனர். பல்லக்குத் தூக்கும் போயிகளோ பாடிக்கொண்டே ஓட்டமும் நடையுமாக விரைந்தனர். அக் குதிரைவீரரிலே ஒருவன் பதினறே வயதுகொண்ட பச்சிளங்காளை. தங்கை கங்கைக்கு மலைநாட்டின் வளம் அனைத்தையும் அவ் இளவல் நவின்றகொண்டே போயினன். ஆயினும் அவனது நாட்டமோ நாற்றிசையிலும் பரவிநின்றது.

அது சமயம் தொலைதூரத்திலே தூளிப்படலம் அடிவானத்தை மறைக்கலாயிற்று. அசுவசாரிகள் அதுகண்டு பதைப்புக்கொண்டனர்; பல்லக்குச் சுமக்கும் போயிகளும் அச்சத்திற்கு ஆளாயினர். நேதாஜி என்னும் அந்த இளைஞன், “என் துணைவர்காள்! இவ்வளவு துணுக்கம் ஏன்? நம் குலதெய்வமாம் அம்மை பவானியும் நமது தோள் இரண்டும் நமக்குத் துணையன்றோ? ஆபத்து வேளையில் அஞ்சி அறிவை இழப்போன் ஆண்மையாளன் ஆவனோ? வருவது வருக! நம் வாள்வலிக்கு ஓர் இழுக்கு உண்டோ?

வீரம் விடுத்துக் கோழைத்தனம் கொள்ளல் நம் குலத்திற்கே ஈனம்! மகாராஷ்டிர மரபினில் வந்து உதித்ததை மறந்தீர்களோ?" என்று கூறி, ஆறுதல் பேசினன்.

சிறிது தூரம் சென்றதும், ஒரு நூறு துருக்கவீரர் தோன்றி, மகாராஷ்டிர வீரரை மூர்க்கமாக வழிமறித்தனர். அத் துருக்கருள் ஒருவன், "பேதைகாள்! நீங்கள் இனிமேல் பிழைக்க வழியில்லை; அஞ்சி ஓட விரும்பினும் ஆகாத காரியம் அது. ஓடின் உயிர் இழத்தல் திண்ணம்" என்று உரத்த குரலில் உரைத்தனன். உடனே அப்பதின்மரில் இருவர் வந்த வழிநோக்கித் தம் பாய்பரியைத் தட்டி விட்டனர். அக்கணமே துருக்கரின் துப்பாக்கிகளிலிருந்து குண்டுகள் விர் என்று புறப்பட்டன. பயந்தோடிய அவ்விருவரில் ஒருவன் படுகாயமடைந்தான்; மற்றவனே ஆவி பறியுண்டான். அவ்வளவில், அஞ்சிய வீரரும் போயிகளும் மூலைக்கு ஒருவராக ஓட்டம் பிடித்தனர்.

அவ்வேளை மங்கை கங்கைக்கு நேதாஜியைத் தவிர வேறு துணை இல்லை. அவள் அஃதறிந்து, அஞ்சி அறிவிழந்து, பல்லக்கின் ஒரு மூலையிலே பதுங்கிக்கொண்டனள். நேதாஜி தன் குதிரையை விட்டு இறங்கி, மேனாவின் அருகே சென்று நின்று, "என் தங்காய்! இந்த உடலில் உயிர் உள்ள அளவும் உன்னைக் காத்துநிற்பேன்; ஆதலின் கண் கலக்கம் வேண்டாம்" என்று தேறுதல் கூறினன். ஊறு ஒன்றும் நிகழாதவாறு காப்பதாக உடன் பிறந்தான் கூறியதையும் செவியில் ஏற்காது கங்கை என்னும் கன்னியோ கடவுளே கதியெனக் கருதிக் கவலையுடன் கிடந்தனள்.

அங்ஙனம் அவள் கிடக்கையில், உச்சிமுதல் உள்ளங்கால்வரையில் போர்க்கோலம் பூண்டிருந்த மாற்றான் ஒருவன் விரைந்துவந்து நேதாஜியை அணுகி, "இளைஞ,

உங்கள் இனத்தார் இசைப்பதுபோல், உன்னையும் உன் தங்கையையும் வாழ்விக்க விரும்பி ஸ்ரீதேவி வலிய வந்துள்ளாள். உன் சோதரியோ விஜயபுரி அரசில் உயர் பதவி வகிக்கும் பெருமகன் ஒருவனுக்குப் பிரியமான பெண்டாவள். நீயோ அவ் வேந்தனிடம் சேவை புரிந்து, பெருமை பல பெறலாகும். ஆனல் ஒரு நிபந்தனை உண்டு. கல்லையும் செம்பையும் கடவுள் என்று கும்பிடுவதை விடுத்து, நீ ஆண்டவன் அல்லாவைத் தொழுதல் வேண்டும். வலுவில் வரும் பாக்கியத்தை உதறித் தள்ளற்க; உடைவாளை உருவி நின்று, நீ யாது பயன் காணக்கூடும்? வாளை உறையில் இட்டு எங்களுடன் நீயும் விஜயபுரி சேர்ந்து, வாழ்வும் வெற்றியும் எய்துவாயாக" என்று நயம்பட நவின்றனன். நவிலவே இளங்குமரனது பட்டாக் கத்தி அப் போர்மகனது பருத்த உடலத்தை இருதுண்டாக்கியது.

தலைவன் தரையில் சாய்ந்தது கண்டு, துருக்கர் அனைவரும் சீறிக் கிளம்பி நேதாஜியைத் தாக்கத் தொடங்கினர். தன்னை நாற்புறமும் சூழ்ந்துகொண்ட கௌரவ சேனையை அந்நாளில் வீர அபிமன் வேல்கொண்டு கலக்கியதேபோல் வாலிப நேதாஜியும் அத் துருக்கவீரரைக் கலக்கிநின்ருன். அப்போது துருக்கரிலே காயம் படாதார் ஒரு சிலரே. நேதாஜிக்கும் காயத்திலே காயங்கள் பல பட்டன.

தன்னந்தனியாக ஓர் இளைஞன் எத்துணை நேரம் ஒரு நூறு பெயரை எதிர்த்து நிற்க இயலும்? ஒரு முகூர்த்த நேரம் உருத்துப் போர்புரிந்த பின்னர், அவ்விளமகன் மூர்ச்சைகொண்டு பொத்தென்று பார்மீது விழுந்தனன். மதவெறி பிடித்த முல்லா ஒருவன் அதுகண்டு, தனது கூரிய ஈட்டிகொண்டு, நேதாஜியின் நெஞ்சத்தைப்

பிளக்க நினைவுகொண்டான். அப் பகைவரின் படையில் ரஸ்தம் சுமான் என்பான் ஒருவன் இருந்தான். அவன் உயர் குலத்தில் உதித்த உத்தம வீரன். படைமுகத்திலும் பெருந்தன்மையே காட்டும் பான்மை வாய்ந்தோன். நேதாஜியின் வாள் வரிசை கண்டு வியந்து நின்றவன். இளைஞன் தன் தங்கையிடம் காட்டிய வாஞ்சை கண்டு, பரவசங் கொண்டவன்.

இத்தகைய ரஸ்தம் சுமான், "மத போதக! நீபுரிய இருக்கும் கருமம் சிறுமையே பயக்கும். மேலும் அஃது ஆண்மையும் அன்று. செத்துக்கிடக்கும் பாம்பைச் சீறி அடித்தல் தீரச் செயல் ஆமோ? சிறு தொழில் செய்யாதே" என்று கூறித் தடுத்தனன்.

முல்லா அது கேட்டு, "ஐயா! இவ் வாலிபன் நினைவு தப்பியே நிலத்தில் கிடக்கிறான். ஆவி இழந்தானில்லை. இவனை இப்போது உயிருடன் விட்டுவிடின், பின்னாளிலே இவன் நம்மவருக்குப் பெருந் தீங்கு விளைப்பான். பெருவீரனுக்கு உரிய இலக்கணங்கள் யாவும் இவனிடம் நிரம்பியுள. இதற்கு இம் மைந்தனது முகவிலாசமும் சரீர வன்மையும் கம்பீரமான தோற்றமுமே சான்றாகும். கைதனில் சிக்கிய வைரியின் உயிரை வாங்காமல் பரிதாபங்கொண்டு பிழைக்கவிடுதல் பேதைமையாகும். அரவின் சிரமும் கையில் கம்பும் இசைவாய் இருக்க, மாநாகத்தை மாய்ப்பதே முதறிஞரின் செயலாகும். இது ஆன்றோரின் அமுதவசனமும் ஆம்" என்று புகன்றனன்.

அது கேட்டு ரஸ்தம் சுமான், "ஐயா! நல்லது! ஆன்றோரின் திருவாக்கை யானும் ஓரளவு அறிவேன். அடுத்தபடியாக அன்னவர் உரைத்திருப்பதை நீர் மறந்தீரோ? ஒருவனது உயிரை வாங்குதல் யாருக்கும்

எளிதாகும். ஆனல் உயிரை ஊட்டுதலோ மிகவும் அருமை யன்ரே? அம்பு தூக்குமுன் ஆர அமர ஆலோசித்தல் வேண்டும். தூரந்தபின், அதனை மீட்டல் என்பது முடி யாத காரியமாம். பாரத வீரனன அர்ச்சுனன் ஒருவனே விடுத்த அம்பை மீட்கும் சக்தி படைத்திருந்ததாகக் கேள்வி. திக்கற்றுக் கிடக்கும் வாலிபனை வதைத்தல் வீரம் ஆகாது. அக் கொடுமை காண யான் மனம் சகியேன். இளைஞன் இறந்துபட்டான் என்பதே எனது துணிவு. அவனது அங்கங்கள் அசைவற்றுக் கிடப்பதைப் பார்" என்றனன். முல்லா அம்மொழிகேட்டு மூர்க்கம் தணிந் தனன். ஏனைய துருக்கவீரரும் தத்தம் ஆயுதங்களை உறையில் இட்டு, அவ்வனிதையைச் சுமந்துகொண்டு சிந்தை மகிழ்ந்து விஜயபுரி போய்ச் சேர்ந்தனர்.

நெடுநேரம் நிலமகளைத் தழுவிக் கிடந்த நேதாஜி முடி விலே சிறிதளவு நினைவுகொண்டனன். கண்ணை விழித்துப் பார்த்தபொழுது எங்கும் அந்தகாரமே நிரம்பியிருந்தது. தலையைத் தூக்க முயன்றும் முடியாமல் பின்னும் சின் னேரம் அவன் சோர்ந்துகிடந்தனன். நள் இரவில் குளிர்ந்த காற்று வீசவே நேதாஜி சிறிது தெளிந்து எழுந்து, தட்டுத் தடுமாறித் தள்ளாடித் தள்ளாடித் தன் வீட்டை அடைந் தனன்.

மகளின் மணத்தினுக்குரிய வரிசைப் பொருள் களுடன் மறுதினம் புறப்படவிருந்த தாயும் தந்தையும் புதல்வனது நிலைகண்டு நெஞ்சம் புண்ணுயினர். புதல் வியின் பிரிவு கேட்டதும் அவர்களது உடல் கருகியது; உள்ளீரல் வற்றியது. தாயோ நெட்டுயிர்ப்புக் கொண்டு நெடுநேரம் நிலத்தில் கிடந்தனள். பின்னர், "அம்மை பவானியே! எத்துணை நாள் நீயும் பராமுகமாய் இருக்கப் போகின்றனை? அன்னிய மதத்தினர் எங்கள் குலக்கன்னி

யரைக் கவர்ந்தும், கோயில்களை இடித்தும், மாளிகை களைத் தகர்த்தும் கொடுமை புரிகின்றனர். மகாராஷ்டிரம் மங்கி மடியத்தான் வேண்டுமோ? தடுமாற்றம் கொண் டுள்ள விஜயபுரி அரசு வீழாமல் எத்துணை நாள் நிலைக்கும்? இதற்குமுன்னம், இப் பூமியிலே எத்துணையோ பேரரசு கள் தோன்றி மறைந்துள. இதனை அத் துருக்கர் உணர வில்லை. சிவாஜி என்னும் சிறுவன் ஒருவன் சினந்து கிளம்பி, மகாராஷ்டிரத்தை மீட்கக் கருதி நிற்கின்றான். பிரபுக்களில் அவனுக்குத் துணையாவார் யாரும் இலரே! மாவலர் என்னும் மலைஜாதியினரே அவனை அண்டி ஆதரிக்கின்றனர். அப்பன் ஷாஜியோ விஜயபுரி அரசில் விழுமிய பதவி பெற்று, மைந்தனை மறந்தனன்போலவே காண்கின்றான். மகாராஷ்டிரப் பெருமக்களிலே பலரும் பகையரசில் பெரும் பதம் பெறவே அண்ணாந்து நிற்கின்றனர். ஆடவ ருக்கு உரிய, ஆண்மையையோ திண்மையையோ அன்னவர் கொள்ளவில்லை. சுயநலமே கொண்டு சுதந்தரம் விடுத்துச் சொக்கித் திரிகின்றனர். இந்நிலையில் நம் திவ்விய தேசமும் தான தர்மமும் தவிப்பதை அன்னார் எங்ஙனம் கருதுவர்? அம் மதிகேடரின் நிலைகண்டு என்செயலாம்; அந்தோ அம்மையே! என் மகள் கங்கைக்காக யான் அழுது புலம்பு கிறேன். எத்துணையோ தாய்மார் என்னைப்போல் இனிய மகளிரைப் பறிகொடுத்து எவரிடமும் உரைக் காமல் மாழ்கிக் கிடக்கின்றனர். துருக்கரின் அந்தப்புரத் திலே மகாராஷ்டிர மகளிரில் பலர் காமக் கிழத்தியராய் வாடி வருந்துதல் அடுக்குமோ? தெய்வம் நின்று கொல்லும் என்பரே. அத் தெய்வமும் அன்னியரின் அட்ட காசங்கண்டு அடங்கிவிட்டதோ? பவானி அம்மையே! நாங்கள் பட்ட துயரம் போதாதோ? இனியும் துயர் எய்த எங்களால் ஒண்ணாது ஒண்ணாது" என்று புலம்பினாள்.

தந்தை தன் மனையாளை நோக்கி, "உயிர்த்துணையே! ஓலமிட்டு நிற்க இது நேரமன்று. புத்திரியைத்தான் பறிகொடுத்தோம். புத்திரனாவது உயிர்தப்பி வாழ வேண்டும். விஜயபுரி அரசின் தளகர்த்தன் ஒருவனை நேதாஜி மாய்த்திருக்கிறான். இந்நிலையில் நம் செல்வன் செத்துவிட்டான் என்று எண்ணியே அன்னவர் போயுளர். நேதாஜி உயிருடன் இருப்பதாக உலகம் அறியின், அத் தளகர்த்தன் கொலையுண்டதற்காக இம் மைந்தனுடன் நாமும் சிறையில் கிடக்க நேரும். ஆதலின், பொழுது புலருமுன் நம் புதல்வனை இங்கிருந்து வெளியில் எங்கே னும் அனுப்பிவிடல் வேண்டும். நம் குலத்தில் உதித்த பெரியார் ஒருவர் மாதிர மலையிலே யோகு புரிந்திருக்கிறார் என்பதை நீ அறிவாய். அவரோ தமது வாலிப வயதில் விஜயபுரி அரசை வீழ்த்த முனைந்துபார்த்தவர். ஆயினும் அவரால் அது ஆகவில்லை. ஆதலின் அம்மை பவானியே கதியெனக் கருதி அவர் அம் மலையிலிருந்து யோகம் புரிந்துவருகிறார். அன்னவரிடம் நந்தம் மகனை அனுப்பி விடுவோம். அப் பெரியாரின் உதவிகொண்டு தேச சேவ கம் புரிய இக் குமரன் முயலின், நம் குலத்திற்கும், தேசத் திற்கும் தேசு கிட்டும். அம்மையின் அருள் எங்ஙனம் உளதோ? யாரே அறிவார்?" என்று கூறினர்.

நேதாஜி அது கேட்டு இம்மென எழுந்து தாய் தந் தையர் இருவரையும் பாதம் பணிந்து, "அம்மையப்பரே! வாய்வீரம் பேச யான் விரும்பவில்லை. எனினும் நம் கந் கையின் கதியும் ஏனைய இளமகளிரின் விதியுங் கண்ட யான் இனி அரைக்கணமும் வாளாவிரேன். அணில் பிள்ளை, கிரிப் பிள்ளைபோல் அடியேனும் பிள்ளை என்று பேர்படைத்துப் பேதுறேன். அம்மை பவானியின் அருளையும் அப் பெரியாரின் ஆசியையும் பூரணமாக

அடைய முயலுவேன். இரண்டும் கைகூடியவுடனே, அஞ்ஞாத வாசத்திலிருந்து பாண்டவர் வெளிக்கிளம்பியது போல், நானும் கிளம்பி, மகாராஷ்டிரத்தை மீட்க முயலா நிற்கும் சிவாஜியுடன் சேர்ந்து, வீரம் விளைத்த பின்னர், உங்கள் இருவரையும் கண்டு, வணங்கிக் களிகொள்வேன். இல்லையேல், நான் தங்கள் தனயன் அல்லன். என் பெயர் நேதாஜியும் அன்று. அன்னாய்! சிறிதும் இரங்கல்வேண்டாம். தயைகூர்ந்து விடை தருக; ஆசியும் புகலுக" என்று உரைத்தனன். பெற்றோர் இருவரும் பூரண ஆசி புகன்று விதியின்றி விடை தந்தனர் அவ் வீரப்புதல்வனுக்கு.

இரவின் கடையாமத்தில், நேதாஜி யாரும் அறியா வண்ணம் பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த சதுக்க நகரம் விட்டுப் புறப்பட்டனன். விசுவாசமுள்ள பணியாளன் ஈசன் என்பானும் வழித்துணையாக உடன் சென்றனன். காயமுண்ட உடல்கொண்டு கடுகி வழிநடக்க நேதாஜியினால் இயலவில்லை. கால்நடையின் களைப்புத் தோன்றாமல் இருக்கும்வண்ணம், ஈசன் விநோதமான கதைகள் பல சொல்லிக்கொண்டுவர, உள்ளத்தின் உரங்கொண்டு நேதாஜி நடக்கலானான்.

மறுதினம் மாலை வேளையில் இருவரும் மாதிர மலையின் அடிவாரம் சேர்ந்தனர். அம் மகான் வசிக்கும் இடமோ மலை உச்சியில் உள்ள ஒரு குகையாம். அது பூமியின் மட்டத்திற்குமேல் இரண்டாயிரம் அடி உயரம் உள்ளது. பாதையோ செங்குத்தானது. அது கண்ட ஈசன் ஆங்கிருந்த மலைவாசிகளின் உதவியை நாடினன். அம் மலைவாசிகள் கைநிரம்பக் காசு கேட்டனர். காசுக்கு எங்கே போவது? நேதாஜி திகைத்து நின்றான். இதற்கிடையில் அந்த யோகபுருஷனது சீடனாகத் துலங்கவே

நேதாஜி வந்திருப்பதை அம் மலைவாசிகள் உணர்ந்து கொண்டனர்.

கொண்டதும், அவர்கள் தேனும் தினைமாவும் கொணர்ந்து இருவருக்கும் கொடுத்துப் பசிக் களைப்பை ஆற்றியதும், கயிற்றுக் கட்டிலில் இருவரையும் அமர்த்தி மலை உச்சியில் கொண்டுசேர்த்தனர்! கர்மயோகி அவ்விளைஞனது முகவிலாசங் கண்டு களித்து அன்புடன் அவனை வரவேற்று, ஆசி கூறினார். ஈசன் என்பான் உற்றது முற்றும் அப் பெரியாருக்கு உரைத்து விடை கொண்டு ஏகினன். மற்றைநாள் பொழுது புலர்ந்ததும், கால் கழுவி வாய்பூசி அப் பெரியாரை வணங்கி நின்றான் நேதாஜி.

அவர் அம் மைந்தனை வெளியே அழைத்துச் சென்று மலைவளத்தைக் காட்டி மகிழ்வித்தார். மந்த மாருதம் மகரந்தப் பொடியை வாரிக்கொண்டு, பலவகை மூலிகை களில் படிந்து வீசத் தொடங்கியது. அதனால் அவனது காயங்கள் ஆறத் தலைப்பட்டன. மருமத்தில் உள்ள புண் கள் காயும் வரையில் மலை வளத்தைக் காட்டுவதே யோகி யின் போதனையாக இருந்தது. பின்னர் அவர் தமதுயோக சக்தியினால் வருங்காலத்தை உணர்ந்து, போர்நூல் அனைத் தையும்நேதாஜிக்குப் பழுதறப் போதித்தார். புராண இதி காசங்களிலிருந்து வீர புருஷர்களின் சரிதங்களை விளங்க உரைத்தார். ராமன், தர்மன், அர்ச்சுனன், கர்ணன், முத லியோரின் வீர வாழ்க்கையினைக் கேட்கக் கேட்க நேதாஜி யின் தோள்கள் தினவுகொண்டன. மாதிர மலையிலே அங்ஙனம் போதம் கொண்டு நேதாஜி காலங்கழிக்கலானான்.

## ௨

# குருவின் திருவாக்கு

அப் பெரியார் நாள்தோறும் குறித்த நேரத்திலே யோகத்தில் அமர்வது வழக்கம். யோகத்தின் தன்மையை உணராத நேதாஜி, அவரது உடலம் அசைவற்று இருப்பதைக் கண்டு, "அந்தோ ஆருயிர் அகன்றுவிட்டதோ?" என்று அஞ்சுவதுண்டு. அப்பால் அவர், யோகு கலைந்து விழிப்பது கண்டே, அவன் ஆறுதல் அடைவான். பின்னரே யோகத்தின் தன்மை அவனுக்குப் புலப்படலாயிற்று.

அவர் யோகில் அமருங்காலையில், "அம்மையே! அடியேன் தேசப்பணி புரிய முயன்றும் முடியவில்லை. தற்சமயம் வாலிபன் ஒருவன் என்பால் வந்து அடைந்துளான். அம் மைந்தனுக்கேனும் தேச சேவகம் புரியும் பாக்கியம் கிட்டுவதாக" என்று துதித்து அம்மையின் வடிவைச் சித்தத்தில் இருத்திச் சிவமயமாக விளங்குவார். அச்சமயம் அவர் முகத்தில் புதிய காந்தி துலங்கும்; அவரது புலன்களும் பொறிகளும் செயலற்றுக் கிடக்கும். அதுகண்டு, "முன்னாளிலே வான்மீகி, விசுவாமித்திரர் முதலியோர் பெருந் தவஞ் செய்கையில், அன்னவரின் உடலெங்கும் புற்று மூடிக்கொண்டுவிடும் என்று கதையில் கேட்டிருக்கிறோம். இன்று அதனைக் கண்ணால் காண்கிறோம்" என்று எண்ணி இறும்பூது கொள்வான் நேதாஜி. உடனே அவனும் ஆங்கு ஒரு பக்கத்தில் தனது கண்ணை இறுக மூடிக் கருத்தைக் கடவுள்பால் இருத்தி அமர்ந்துவிடுவான்.

சில சமயங்களில் தங்கை கங்கையின் நினைவு தோன்றவே, "வளர்த்த கிளியைப் பூனை பறித்துச் சென்றது போல், பதினைந்து வயது கொண்ட பெண்மணியைத் துருக்கர் கவர்ந்து சென்றனரே" என்று அம் மகாராஷ்டிர வாலிபன் மனங்கரைந்து கண்ணீர் வடிப்பான். "திக்கற்ற மங்கையை மீட்க வகையின்றி வீடு திரும்பிய ஒருவனும் ஆண்பிள்ளை ஆவனோ?" என்று அலமருவான். "காசி என்னும் கண்மணி நம் கங்கைக்கு நேரவிருக்கும் கதியை முன்னறிந்தே, 'முட்செடிகளை வெட்டித்தள்ளுவதில் யாது பயன்? அதில் வீரம் இலது. தேச விரோதிகளாய், குலத்தின் வைரிகளாய், கொடுமை இழைப்பவராய்த் திரியும் அன்னியரை வாட்டின் உனக்கு மாலையிடுவேன்' என்று சொல்லினள் போலும்" என உன்னி நைவான். அங்ஙனம் பகைஞரை வதைத்தாலன்றி, அக் காசியின் மணமாலையைப் பெறுதல் எங்ஙனம்? என்று எண்ணி ஏங்குவான். "கங்கையைக் கவர்ந்து சென்ற துருக்கர் காசியையும் கவர்ந்து விடுவாரோ?" என்று கருதிக் கலங்குவான். தாய் தந்தையரின் தவிப்பை நினைந்து நெட்டுயிர்ப்புக் கொள்வான். தேசம், தர்மம் இரண்டையும் பாதுகாக்கும் பரம பாக்கியம் இப்பாவி படைத்துளனோ? என்று எண்ணி மனங் குழம்புவான். இங்ஙனமெல்லாம் அக் குமரன் கருதிக் கலங்கிக் கண்ணீர் வடிப்பதை ஒரு நாள் அம் மகான் கண்டார். கண்டதும், "அப்பனே, அந் நன்னாள் விரைவில் கிட்டும். வீணே வருந்தல் வேண்டாம்" என்று கூறி ஆறுதல் அளித்தார்.

குருகுல வாசத்தில் நேதாஜிக்கு ஐந்தாண்டுகள் சென்றன. சென்றதும், பையனது படைக்கலப் பயிற்சியை ஒரு தினம் அவர் பரீட்சித்து உணர்ந்ததும் அவனை அழைத்து, அருகே இருத்திப் புகல்வார்:

"அப்பனே! இந்த என் தோல் பையுள் இருக்கும் கூத்தன் சின்னாளில் புறப்பட்டுவிடுவன். ஆயினும் எனது ஆவி அகலும் நேரத்தையான் அறியேன். விரைவில் பரகதி கிட்டும் என்பதுமட்டும் தேற்றம். அத்தருணம் உனது உயிருக்கும் தீங்கு நேரும் என்று தோன்றுகிறது. ஆயினும் அந்த ஆபத்து, கதிரவன் கிரணங்கண்ட பனித்துளிபோல் பறந்து போய்விடும். ஏனெனில் பன்னெடுநாள் மகா ராஷ்டிரத்துக்குத் தொண்டுபுரியும் பாக்கியம் படைத் துளாய் நீ. யான் இறந்துபட்டதும் நீ நாட்டினிடையே சென்று, தெய்வப் பணியும், தேசப் பணியும் புரிதல் வேண்டும். பயபக்தி விசுவாசம் கொண்ட சீடனாக இன்றளவும் நீ விளங்கினாய். பின்னாளிலும் அங்ஙனமே விளங்கு வாயாக. கொடுமைக் குணமோ கோழைத்தனமோ துரோகசிந்தையோ உன்னிடம் தலைகாட்டல் ஒண்ணாது. போர்நூல் பயிற்சியிலும் பராக்கிரமச் செயலிலும் உன்னை விஞ்சுவார் மகாராஷ்டிரத்தில் இரார். அஸ்திர சாஸ்திரங்கள் அனைத்திலும் நீ கைதேர்ந்திருக்கின்றனை. ஐரோப்பியர் கையாளும் துப்பாக்கி ஒன்றில்மட்டும் நீ பழகுதல் வேண்டும். இலக்குத் தவறாமல் அம்பு தூரக்க வல்ல ஒருவன் திறமையுடன் துப்பாக்கியும் தரித்து, குண்டு பாய்ச்சமுடியும் என்பதில் இம்மியும் ஐயம் இல்லை. போர்முனையிலே பரிவீரரையும் காலாளரையும் பாங்காக அணிவகுக்கும் ஆற்றலில் உனக்கு இணையா வார் யாவர் உளர். தீனரைக் காக்கவும் தர்மத்தைப் புரக் கவும், தேசத்தை மீட்கவுமே நீ வாள் உருவுதல் வேண்டும்.

"வருங்கால நிகழ்வுகளும் என் ஞானக்கண்ணுக் குப் புலப்படுகின்றன. சிவபெருமான் என் கனவிலே தோன்றி, மகாராஷ்டிரத்தை மீட்க முயலாநிற்கும் சிவாஜி

என்னும் சீரிய மைந்தனுக்கு அருள் சுரந்திருப்பதாக உரைத்துப் போயுளார். அம்மகிமையான போரில், மாண்புள்ள சிவாஜியின் பக்கலில் இருந்து, சமர் செய்ய யான் பாக்கியம் படைக்கவில்லை. ஆயினும் என் சீடனாகிய நீயேனும் அப்பேறு படைத்துளாய் என்று கண்டு பெருமகிழ்வு கொள்கின்றேன்.

ஆண்டவனது இன்னருள் வாய்க்கப் பெற்ற அச் சிவாஜி தனது படைவகுப்புடன் எதிரிகள்மீது பாய்வதை நான் காண்கிறேன். அவ் வீரபுருஷனுக்கு வலது கைபோல் விளங்குவதையும் நோக்கியுள்ளேன். வெற்றிமாலை சூடும் சமயத்திலும், ஆபத்தில் அகப்பட்டுக்கொள்ளுங்காலையிலும், அரிய பணியாற்ற நேரும் நேரத்திலும், அம் மன்னவனுக்கு உற்ற துணையாக விளங்குதல் விழுமிதேயாம். சில சமயம் சிவாஜிக்கு வெற்றிமாலை கிட்டாதுபோம். ஆனால் அவன் புறங்காட்டி ஓடிவிடுவான் என்பதில்லை. பெருவெள்ளம் புரண்டு வருகையில், நாணல்புல் மடங்கிக் கொடுத்து மீண்டும் முன்போல் நிமிர்ந்து நிற்கும் அல்லவா? அங்ஙனமே பெருவலி கொண்ட பகைவனைக் காணுமிடத்துப் போர் நூலின் முறைக்கு இணங்க, நம் சிவாஜி மடங்கி நிற்க நேரும். ஒரு சமயம் அச் சிவாஜி சிறையில் அகப்பட்டுக் கொள்வான் எனினும் காலமும் இடமும் கருதிக் கிளம்பித் தன் பகைவனது மார்பகத்தை ஈட்டிகொண்டு அளவு பார்ப்பான்; சிரத்தை வாள் கொண்டு வெட்டி வீழ்த்துவான்; 'சிவாஜி பயந்தோடி விட்டான்; பதுங்கிக் கிடக்கின்றான்' என்று எண்ணிக் கிடக்கும் பகைவரோ அவன் கைதனில் சிக்கிக் கண் கலங்குவார்; கதியிழப்பர்; உயிரும் துறப்பார். அவன்பக்கம் இருந்து, ஒரு முகூர்த்த நேரமேனும் போர் புரியின் அதுவே பரம ஆனந்தமாகும். அந்த ஆனந்தம் எனக்கு இல்லை; உனக்கு உளது. தன்னைத் தொடருவார்

மீது வேங்கை சீறிப் பாய்வதுபோல் சிவாஜி சீறிப் பாய்வ தைப் பார்க்க இரண்டு கண்கள் போதா.

"மகனே! எனது ஞானதிருஷ்டியில் படுவதை யெல்லாம் உனக்கு உரைத்துளேன். இவற்றையெல்லாம் நீ நன்கு சிந்தனை செய்வாயாக. யான் நின்னுடன் உரை யாடுதல் இதுவே கடைசி முறையாக இருந்தாலும் இருக்கலாம். மாகாராஷ்டிர மக்களையும் தேசத்தையும் மீட்கப் புறப்பட்டு மாண்புடன் போர் முருக்கி மகா ராஷ்டிர மன்னர்பிரான் என்ற பட்டம் சூடி, ஒற்றைக் குடையின்கீழ் அரதன அரியாசனத்தில் அமரவிருக்கும் சீரிய சிவாஜிக்கு, வீர! நீ உயிர்த்துணை யாக விளங்குவாயாக! வேதியர் பலரும் புண்ணிய நதி களின் தூய நீர் கொணர்ந்து, வேத கோஷம் புரிந்து, அபி ஷேகம் செய்து சிவாஜிக்கு முடிசூட்டும் வைபவத்தை நான் ஞானக் கண்கொண்டு காண்கிறேன். இம்மட்டோ, என் ஞானதிருஷ்டியில் புலப்படுவது? சக்கரவர்த்தி எனப் பட்டஞ் சூடிப் பெருமையும் கொண்டு அவன் பர மன் பாதம் சேர்ந்தபின்னர் அவனது வழி முறையில் வந்தோர் டில்லிமா நகரிலும் அழகிய ஆக்ரா நகரிலும் வாகைமாலையுடன் புகுந்து வெற்றி முரசு அறைவதையும் பார்ப்பேன்.

"புதல்வ! இம் மாதிரமலையின் ஒருசார் சென்று சித்தசுத்தியுடன் என் வசனங்களைச் சிந்தனை செய்வாயாக. அதற்கிடையில், யானே நம் தேசம் விரைவில் விடுதலை பெறவேண்டுமென அம்மை பவானியை வழுத்தி நிற்பேன். அவ் விடுதலைப் போரில் நீ விழுப்பம் பெறவேண்டும் என்று வரம் கேட்கவும் நான் தவறமாட்டேன். அப்பனே! அஞ்சேல்! அம்பிகையை அனவரதமும் துதி

செய். உமாபதி உன் சிந்தையை விட்டு அகலாது இருப்பானாக; சுபம்!"

குருவின் வசனத்தைச் சிரமேற்கொண்டு நேதாஜி அம்மலையின் ஒரு பக்கம் சென்று, சிந்தனை செய்யலாயினன். கன்றை விட்டுப் பிரியும் தாய்ப் பசுவேபோல் துறவியும் அவ்வாலிபனது பிரிவுக்கு வருந்தினார். அச்சமயம் அவருக்கு ஒருபால் துயரமும் ஒருபால் பெருமையும் உதித்தன. தேச விடுதலைப் போரில் உடனிருந்து ஊழியம் புரியப் பேறு பெறவில்லையே என்பதுதான் அவரது துயரத்தின் காரணமாகும். அவ்விடுதலைப் போருக்கு உரிய வீரன் ஒருவனை ஆசி கூறி அனுப்புகின்றோம் என்பதே அவரிடம் உதித்த பெருமைக்கு மூலம். ஆதலின், "உடலெடுத்த பயன் எய்திவிட்டோம். இனி இளைஞர் நாட்டைக் காத்து நலம் பெறுவர்" என்ற எண்ணம் மேலிட அவரது ஆன்மா சாந்திகொள்ளத் தலைப்பட்டது.

மலையின் ஒரு புறத்தே வீற்றிருந்து தன்னை மறந்து நேதாஜி சிந்தனை செய்கையில், அவனுக்குப் பின்னே இடிமுழக்கம்போன்ற பெருங்குரல் ஒன்று கிளம்பிற்று. அதன் பின் பொத்தென்ற பெருஞ் சத்தம் ஒன்றும் காதில் பட்டது. உடனே அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தனன். அவனுக்குப்பின்னே பத்தடி தூரத்தில் பதினறடி வேங்கை ஒன்று கிடந்தது. அதன் அருகே குருவின் உடலமும் தென்பட்டது.

நேதாஜி சிந்தனை செய்யாநிற்கையில், அவனை ஓர் அறையால் ஆவி கவர்ந்து உதிரம் பருகவேண்டி, வேங்கை ஒன்று பாய்ந்து செல்வதை அப்பெரியார் காணலானார். அவ்வளவுதான் தாமதம். இளவலுக்கும் புலிக்

கும் இடையே அம் மகான் நின்று, தனது அம்புகொண்டு அவ்வேங்கையை எதிர்த்தார். அம்பெறி கொண்டதும், அவ்வேங்கை, அடங்காச் சினங்கொண்டு, ஆண்மையு டன் அவர்மீது பாய்ந்தது. அவர் தனது குத்தீட்டி கொண்டு தாக்கவே, வேங்கையின் மண்டை கிழியலா யிற்று. எனினும், அம் மிருகமோ தான் தரையில் விழு முன்னம், பழி வாங்குவதுபோல் அவரைத் தனது முன் னங்கால்கொண்டு ஓர் அறை கொடுக்கவே அவர் மண்டை பிளந்து மாண்டு வீழ்ந்தார். மைந்தன் ஹுமாயூனைக் காக்கவேண்டி, பாபர் தனது உயிரைக் கொடுத்தனன் என்றால், இப் பெரியாரோ தம் சீடன் நேதாஜியைக் காக்கவேண்டித் தம் இன்னுயிரை ஈந்து மேலுலகம் செல்லலானார்.

நேதாஜி அதுகண்டு முதலில் பதைத்தனன். ஆயி னும், அழுதும் நொந்தும் ஆவது ஒன்றும் இல்லை எனக் கொண்டு, மேல் நடக்கும் காரியத்தைக் கவனிக்கலாயி னன். யோக புருஷனது முடிவைக் கேட்ட மலைவாசிகள் திரண்டுவந்து, 'கண்கண்ட தெய்வம் மறைந்ததே' என்று கண்ணீர் வடித்தனர். பின்னர், நேதாஜியுடன் கூடித் துறவிக்கு உரிய சமாதிக்குழி வெட்டி அதற்குள் அவரை அடக்கம் செய்தனர். பம்பாய் நகருக்கு அருகி லுள்ள மாதிர மலை தனவந்தரின் கோடை வாசஸ்தலமாம். அப் பெரியவர் யோகு புரிந்த குகையின் அருகே ஒரு சீமானது மாளிகை இச்சமயம் எழும்பியுளது. அக் குகையை அவர் அன்னமே பாதுகாத்து வைத்திருக்கிறார். யோகியின் சமாதிக் குழியையும் இன்று அங்கே சிதை வின்றிக் காணலாம்.

வேதியரின் உதவி கொண்டு, யோகிக்குரிய கிரியை அனைத்தும் புரிந்தபின்னர், குருவின் கட்டளைப்படி

நாட்டிடையே சென்று விடுதலைப் போரில் கலந்து கொள்ள நேதாஜி புறப்பட்டனன். புறப்படுங்காலையில், அரையில் புலித்தோலும், கையில் தண்டு கமண்டலமும், உடலெங்கும் விபூதியும் விளங்காநின்றன. போர்முனையில் புகுமுன்னர், தாய் தந்தையரைக் கண்டு, குருவின் திருவாக்கை உரைத்து, அன்னவரிடம் ஆசி பெற அவனுக்கு ஆவல் உதித்தது. அங்ஙனமே, தவக் கோலத்துடன் சதுக்க நகரம் செல்வதென அவன் அம் மாதிர மலையைவிட்டு இறங்கி, மலைவாசிகளிடம் விடைபெற்றுச் சிறிது தூரம் சென்று, மற்றோர் மலையின் உச்சியைச் சேர்ந்தனன்.

3

# அரசாளும் அகந்தை

மாலை நேரத்திலே நேதாஜி அம்மலையின் உச்சி சேர்ந்தனன். ஆங்கே குதிரை வீரன் ஒருவன் தென்பட்டான். கறுத்த தாடியும் நறுக்கு மீசையும் அவனைத் துருக்கன் என மொழிந்துநின்றன. துறவியின் வடிவந் தாங்கி வரும் வாலிபனைக் கண்டதும் அப் பரிவீரன், "கல்லை வணங்கும் காபிர்! இங்கே வா, ராஜ மாளிகை என்னும் கோட்டைக்குப் போகும் வழி யாது? விரைவில் விளம்பின் சாம்பல் பூசிய சவ உடலில் உன் உயிர் தங்கும். இல்லையேல் இக்கணமே இன்னுயிரை இழக்க நேரும்" என்று படாடோபமாகப் பேசினன்.

நேதாஜி அது கேட்டு வீர நகை புரியவே, மீண்டும் அத் துருக்கன், "ஆடையின்றித் திரியும் ஆண்டியே! உன் முன் உரையாடுவோன் யாவன் என நீ உணராயோ? மகாராஷ்டிரத்தைக் கட்டியாளும் குலத்தைச் சேர்ந்தவன் என்பது ஞாபகம் இருக்கட்டும். விஜயபுரிக்குச் சொந்தமான தோரணம், ராஜகிரி, சிம்மகிரி, புரந்தரம், ராஜ மாளிகை முதலிய பல கோட்டைகளைக் கள்வனைப்போல் கவர்ந்துகொண்டு, பதுங்கிக்கிடக்கும் சிவாஜி என்னும் அச் சிறுவன்மீது சீறிக் கிளம்பியுள்ளான் இவ் வீரன். நாளை விடியற்காலையில் ராஜமகி என்னும் கோட்டையைத் தாக்க, என்றன் துருப்புகள் முன்னே சென்றுள. அக் கோட்டையை மீட்டு அங்கே தான் புகுந்திருக்கும் காசியையும் அவன் தந்தையையும் சிறை செய்யச் செல்

கின்றான் இத் தளகர்த்தன் என்பதை எண்ணிப்பார்" என்று வீரம் பேசினன்.

பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது அல்லவா? எனவே நேதாஜியும் அவ் வெற்றுரை கேட்டுக் கலங்கவில்லை. ஆனால், 'தங்கை கங்கையைத்தான் பறிகொடுத்தோம். கருத்துக்கு இசைந்த காசிக்குமா ஆபத்து நேரும்?' என்று அவனது உள்ளம் துடித்தது. அத் துடிப்பினை நேதாஜி அடக்கிக்கொண்டு, வாயளவில் பேசும் வீணனை ஏற இறங்க நோக்கினன், ஆண்சிங்கமே போல்.

அந்த நோக்கினைக் கண்டதும் முகம்மதியனுக்கு உள்ளூற உதைப்பு எடுத்தது. ஆயினும் அவன் அதனைப் புலப்படுத்திக் கொள்ளாமல், "சாம்பல் பூசி நிற்கும் பையலே, இரவு படுமுன், யான் ராஜமாளிகை போய்ச் சேரவேண்டும். அதன் அருகிலுள்ள மலையில் என் துணைவர் போர்க்கோலத்துடன் நிற்பர், பொழுது புலர்வதை எதிர் நோக்கி. எனக்கு முன்னே விரைந்து சென்று வழி காட்டாயேல், அயுப்கானது பாய்மா உன்னைத் தூக்கிப் போட்டு மிதிக்கும்" என்று கூறினன்.

உடனே நேதாஜி அப் பாய்மாவின் கலினத்தைக் கையினுல் பற்றிக்கொண்டு, "இஸ்லாமிய வீர, உனது வாய் வீரம் கண்டுவிட்டேன். குலைக்கிற நாய் கடிக்காது. ராஜமாளிகை சென்று, அதனில் நீ பிறைக்கொ பறக்கவிடுமுன், இப் பையலுடன் வாட்போர் புரிந்து உன்றன் ஆற்றலின் அளவைக் காட்டுவாயாக. விரைவில் குதிரையைவிட்டு இறங்கி நிலத்தில் நின்று வாளை உருவ வல்லையோ?" என்று சிங்கநாதஞ் செய்தனன்.

அயுப்கான் தன் குதிரையைவிட்டு இறங்க மனமும்

துணிவும் இன்றி, அவனைத் தரையில் சாய்க்கக் கருதித் தன் குதிரையைத் தட்டிவிட்டனன், தடபுடலாக. நேதாஜி அம் மிருகத்தின் கடிவாளத்தை இழுக்கவே, அசுவம் ஆத்திரங்கொண்டு தன்மீது இருக்கும் தலைவனைத் தலைகுப்புறத் தரையில் தள்ளியது.

தொப்பென்று தரையில் வீழ்ந்த அயுப்கானை நேதாஜி வாரி எடுத்து நிறுத்தி, "வீர! நீ குதிரையை விட்டு இறங்காவிடினும் அந்தப் பிராணியே உன்னைக் கீழே இறக்கிவிட்டுள்ளது. இனி நீ தடையின்றி வாளை உருவி வரிசை காட்டலாம்" என்றனன். அயுப்கான் தனது வலது கரத்தைத் தடவிக்கொண்டே, "வீரத் தவசியே, என் வலக்கரம் சுளுக்கியுளது. ஆதலின் வாட்போர் புரிய வகையில்லை. என்செய்வேன்" என்றனன்.

அரசாளும் இனம் என்னும் அகம்பாவமும் படை வீரன் என்னும் படாடோபமும் பறக்க, பதைபதைப்புடன் நின்ற அயுப்கானிட மிருந்து நேதாஜி உடைவாளைக் கைப் பற்றிக் கொண்டு, "நண்பா! ராஜமகி செல்ல விரும்பி யினையோ ? அக் கோட்டையினை உனக்குக் காட்டுவ துடன், யானும் அக் கோட்டையினுள் புகுதல் வேண்டும். ஆதலின் என்னுடன் விரைந்து வருக" என்றனன் எடுப்பாக.

அயுப்கான் அதுகேட்டுக் கோபக்குறி காட்டலா யினன். நேதாஜி, "வீர! கழுகும் பருந்தும் உன் பருத்த உடலைத் தின்றிருக்கவேண்டின், என்னுடன் விரைந்து நடந்துவருதல் வேண்டும்" என்று கர்ச்சனை புரிந்தனன். 'அகங்கொண்டு அறிவிழந்து அல்லலுக்கு ஆளானேமே' என்று அயுப்கான் அகங்கரைந்தது கொஞ்சமன்று.

முடிவில், அவன், "வீர வாலிப, நீ வேண்டுமளவு பொன்தருவேன். என்னை விட்டுவிடுதல் வேண்டும்" என்று இரந்து கேட்டான். நேதாஜி, "நல்லது; பொன் பெற்று உனக்கு விடுதலை தருதல் வேண்டும்போலும்! ராஜமாளிகை சேர நீ பேராவல் கொண்டாய் அல்லவா? அதனுள் நான் உன்னைக் கொண்டு சேர்த்த பின், கைக் கூலியின் அளவை நிர்ணயித்துக் கொள்வோம்" என்று இசைத்தனன்.

பின்னர் விதியின்றி அயுப்கான் நேதாஜியுடன் செல்லலாயினன். 'அக் கோட்டைக்கு நேர்ப்பாதையின் வழியே செல்லின், பகைஞரது கையில் சிக்கவேண்டும்' என்று நேதாஜி கருதி, குறுக்குப் பாதை ஒன்று கண்டு அவ்வழியே கடுகி நடக்கலானான். இருவரும் சிறிது தூரம் சென்றதும், செங்குத்தான பள்ளத்தாக்கு ஒன்றைக் கடந்து செல்ல நேர்ந்தது. குதிரை அதன்மீது ஏறி இறங்க அவதிப்படுவதை நேதாஜி கண்டு, அருகே இருந்த மாவலன் ஒருவனிடம் அதை அவன் ஒப்படைத்தனன். அப்பால் இரவு எட்டு நாழிகை அளவில் இருவரும் ராஜமாளிகையின் கோட்டைவாயிலைக் குறுகினர்.

ஆங்கிருந்த மகாராஷ்டிரக் காவலாளன், "யாரோ பகைவர் இருவர் தோன்றியுளர்" என்று நினைத்துத் தனது துப்பாக்கியைச் சாய்த்துக் குறிபார்க்கத் தலைப்பட்டனன். 'கோட்டையின் காவலன் திரியம்பகராவினை அவசரமாகக் காண வந்திருக்கும் தூதன்மீது குறிபார்ப்பதோ?' என்று நேதாஜி நயமாக நவின்றனன்.

உடனே அக்காவலாளன், "வீர தூதின் விவரம் யாது? தலைவர் சயன அறை சென்றுவிட்டார். அவரை எழுப்ப இது தருணம் அன்று. விடியும்அளவும்

நீ காத்திருக்கவேண்டும்'' என்று கூறினன். நேதாஜி, “காவல! காரியம் கன அவசரமானது. காலைவரையில் காத்திருப்பின், கோட்டைக்கே அனர்த்தம் நேரும். கடுகிச் சென்று உங்கள் தலைவனை உடனே எழுப்புதல் வேண்டும். இன்றேல் யான் சென்று எழுப்புவேன். என்னைத் தடைசெய்ய நின்னால் இயலாது'' என்று கூறினன் கம்பீரமாக.

உடனே காவலாளன் நேதாஜியை உள்ளே புக உத்தரவிட்டு ஓர் ஆளையும் உடன் அனுப்பினன். கோட்டையின் உள்ளே புகுமுன்னம் அயுப்கானைத் தக்க காவலில் வைத்துச்செல்ல நேதாஜி மறக்கவில்லை. பணியாளன் சென்று படைத்தலைவனை எழுப்பவே, 'கரும்பு போன்ற தூக்கத்தைக் கெடுப்பதோ' என்று கடுகடுப்புடன் கூறிக்கொண்டே கண் திறந்தான் திரியம்பகராவ். உடனே அத் தலைவன், நேதாஜியை நோக்கி, “யார் நீ! இந்த நடுநிசியில் என்ன தூது சுமந்துவந்துளாய்?'' என்று சினம்படப் பேசினன்.

அதிகாலையிலே கோட்டையினைத் தாக்க விஜயபுரியின் படைஞர் வந்துளர் என்று கேட்டதும், படைத்தலைவன் முகம் வெளுத்தது. நேதாஜியை அருகழைத்து, உற்றது முற்றும் உணர்ந்துகொண்டனன். கொண்டதும், “கோட்டை, கொத்தளங்களை நன்கு பார்க்கவில்லையே என்செய்வேன்? காவல் சேனையின் பெரும்பாகத்தை வேந்தன் சிவாஜியிடம்வேறு அனுப்பிவிட்டேனே. விடியுமுன் பகைஞர் வந்துவிடுவரே'' என்று கையைப் பிசைந்தனன்! நேதாஜி அது கேட்டு, “ஐயா! தாகத்தவிப்பு உண்டானபின், கிணறு தோண்டுவதுபோல் கரும்புரிதலும் தலைவனுக்கு அழகுபோலும்!'' என்று

கூறி, உள்ள வீரரை ஆயத்தப்படுத்துமாறு புகன்று, வழி வகைகளையும் விளம்பினன்.

அங்ஙனமே, கொத்தளத்தைப் பழுதுபார்க்கும் வேலையில் திரியம்பகராவ் முனையலாயினன். இதற்கு இடையில் நேதாஜி காசியின் தந்தையான தத்தாஜி இருக்கும் இடம் சென்று, "ஐயா! அதிகாலையில் மாற்றார் வந்து கோட்டையினைத் தாக்கப் போகின்றனர். அன்னவரை எதிர்த்துநிற்பதற்குரிய ஆள்பலம் நம்மிடம் இல்லை. ஏற்ற பாதுகாவலும் இல்லை. சில தினங்களில் இக்கோட்டை தகர்ந்து பகைவர் வசம் ஆகிவிடும். ஆதலின், நீவிர் உமது அருமை மகளுடன் ஓடிப்போதல் வேண்டும். இல்லையேல் முகம்மதியரின் கையில் என் தங்கையைப்போல் உம் குமாரியும் சிக்க நேரும்" என்று உரைத்தனன். அருகிருந்து அதனைக் கேட்டுக்கொண் டிருந்த காசி அவ் வீர மைந்தன் யாவன் என முதலில் உணரவில்லை.

'என் தங்கையைப்போல்' என்ற சொல் கேட்டதும், நேதாஜி என்று ஊகித்துக்கொண்டு தனது இரு கண்ணினும் அவ்விளைஞனது அழகையும் வீரத்தையும் பருகி, "அன்ப, அன்றே உரைத்தேன் மகாராஷ்டிரத்தை மீட்க வேண்டும் என்று. இன்றும் உரைக்கிறேன். முகம்மதியரைப் புறங்கண்டு நம் தேசத்தை மீட்பின், காசியின் மணமாலையைப் பெற்று நீ மகிழலாம்" என்று கூறினள். தத்தன் அச் சொல்லைக் கேட்டுச் சந்தோஷம் கொள்ளவில்லை. 'ஏழை மகன் ஒருவனுக்கு என் மகளை மனம் உவந்து கொடுப்பேனோ?' என்று இதயத்துள்ளே எண்ணினன். ஆயினும், அதனை உரைக்காது, தன் குமாரியுடன் தப்பிப் போகும் வழியில் சிந்தையைச் செலுத்தினன். தகப்பனும், மகளும் தப்பிச்செல்லப் புறப்படுகையில்,

நேதாஜி தன் துணைவனான ராமன் என்பவனை உடன் அனுப்பினன், உற்றவிடத்து உதவி புரிய.

மறுதினம் கோழி கூப்பிடுமுன், விஜயபுரி வீரர் ஆவேசத்துடன் கிளம்பி, ராஜாமாளிகையைத் தாக்கத் தொடங்கினர். அன்னவரிடம் இருந்த பெரிய பீரங்கிகள் குண்டு மழை பொழியத் தலைப்பட்டன. கதிரவன் வான வீதியின் கோடியிலே தோன்றுமுன், கோட்டைச் சுவரின் ஒரு பாகம் பிளவுண்டு போயிற்று. அதுகண்டு விஜயபுரி வீரரிலே ஐம்பதின்மர் நூலேணி சகிதம் முன்னேறி வந்து, அப்பிளவின் பக்கம் நண்ணினர். அவர்கள் தலைவனாக விளங்கியவன் ஆறடி உயரமுள்ள ஒரு நீக்கிரோவன்; காலன்போல் கரிய திருமேனி கொண்டவன். இத்தகையோன் வாளும் கேடயமும் தாங்கி, கர்ஜனை புரிந்துகொண்டு கடுகி வருவதை, மகாராஷ்டிர வீரர் கண்டு அவன்மீது அம்பெய்யத் தலைப்பட்டனர்.

உடலெங்கும் அடிபட்டு உதிரம் ஆறாகப் பெருகி ஓடியும் நீக்கிரோவன் அதனைச் சட்டை செய்யவில்லை. மகாராஷ்டிரர் அதுகண்டு, "இக்கரிய உருவினன் மானிடன் அல்லன். அஞ்சா நெஞ்சுபடைத்த அரக்கனே போலும்" என்று கூறி அஞ்சினின்றனர்.

நேதாஜி அஃதுணர்ந்து, "அவன் ராவணனும் அல்லன்; கும்பகர்ணனும் அல்லன்; நம்மைப் போன்ற ஒரு மானிடனே. நீங்கள் அஞ்சி நிற்பினும் நேதாஜி அஞ்சி நில்லான். ஆடவராயுள்ளோர் என் பின்னே வரலாம்; பேடிகள் பின்வாங்கிச் செல்லலாம்" என்று புகன்று, அப் பிளவின் வாயில் போய் நின்று, வைரியின் வரவை எதிர்நோக்கி இருந்தனன். நீக்கிரோவன் தனது பட்டாக் கத்தியை உருவிக்கொண்டு ஒரே பாய்ச்சலாக நேதாஜியின்மீது பாய்ந்தான்.

நேதாஜி சமயம் பார்த்துச் சற்றே ஒதுங்கிக் கொடுத்தனன், அன்று கரன்முன்னே ரகுராமன் ஒதுங்கிக் கொடுத்தது போல். நேதாஜி ஒதுங்கிக் கொடுத்ததனால், நீக்கிரோவன் தன் குறியை இழந்ததுடன் பாய்ந்த வேகத்தில் பாதமும் சறுக்கி விழுந்தனன். ஆயினும், அந் நீக்கிரோவன் மனம் சலியாமல், தனது வாளை ஓங்கி வீசவே, அது நேதாஜியின் தலையைக் குறிக்கொண்டு வந்தது. உடனே நேதாஜியின் கேடயம் அவ் வாளினை எதிர்த்ததால், அவ்வாள் வளைந்துவிட்டது. அதுகண்டு நீக்கிரோவன் தனது ஈட்டியை எடுத்து நேதாஜியின் விலாப் புறத்தை நோக்கிக் குத்தத் துள்ளி எழுந்தனன். ஈட்டிக் குத்தையும் கேடயம் தாங்கிக்கொண்டது. நேதாஜியின் வாளாயுதம் அந் நீக்கிரோவனது உடலின் தசையைக் கழிக்காநின்றது.

அங்ஙனம் காயமுண்டும் நீக்கிரோவன் கலங்கினானில்லை. நேதாஜிக்குத் துணையாக நின்ற பதின்மரில் இருவரை அவன் வெட்டிவீழ்த்தினான். பின்னர் நேதாஜியை வீழ்த்தினாலன்றி, வாகை சூடமுடியாது என்று கண்டு, வேறோர் வாள் கொண்டு ஓங்கி வீசினன். இதற்குள் நேதாஜியின் ஈட்டியோ அவனைக் குத்திக் கீழே சாய்த்துவிட்டது. தலைவன் வீழ்ந்தது கண்டு, முன்னேறி வந்த முகம்மதியர் பின்வாங்கி ஓடினர். ஆயினும் ராஜமகியின் ஆபத்தோ அகன்றபாடில்லை. கோட்டையைக் காவல் புரிந்துநின்ற மகாராஷ்டிரரின் தொகை இருநூறுகும். விஜயபுரியின் படை வகுப்பிலோ ஆயிரவர் உளர். ஆயிரவருடன் ஒரு சிலர் இரண்டொரு நாள் எதிர்த்து நிற்க இயலுமேயன்றி நீடித்து நிற்க இயலாதல்லவா?

சில தினங்களுக்குள் பக்கபலம் கிட்டாது போயின்,

கோட்டை வீழ்ந்துவிட நேரும். அக் கோட்டையின் ஒரு பாகம் ஸ்ரீவர்த்தனம் எனப்படும். அது அறுநூறடி உயரம் உள்ளது. ஏனைய பாகங்களைவிட நல்ல பாது காப்பு வாய்ந்தது. ஆதலால் அவ்விடம் சென்று, எதி ரியை எதிர்த்துநிற்கலாம் என்று திரியம்பகராவ் எண்ணி, நேதாஜியைக் கேட்டனன்.

நேதாஜியும் 'சரி' எனவே மகாராஷ்டிரர் அவ்விடம் சேர்ந்தனர். சேர்ந்தபின்னர், 'பக்கபலம் வேண்டி, சிவா ஜிக்கு எங்ஙனம் சொல்லியனுப்புவது? நாற்புறமும் முகம் மதியரோ சூழ்ந்து நிற்கின்றனர். என் செயலாம்!' என்று திரியம்பகராவ் கலங்கி, நேதாஜியை நோக்கி, "வெற்றி வீர! ஆபத்தை முன்னறிந்து எச்சரிக்கை கொடுத்து எங் களைக் காத்த பெருமை உனதே ஆகும். நீக்கிரோவன் மாய்க் கப்படாதிருப்பின், அக்கணமே நம் கோட்டை வீழ்ந் திருக்கவேண்டும். யாங்களும் வீழ்வோ தாழ்வோ அடைந் திருப்போம். அப் போராட்டத்தில் தலைகொடுத்த நீயே இச்சமயமும் எங்களுக்கு ஊன்றுகோல்போல் உதவு வாயாக" என்று இரந்துவேண்டினன். ஏனைய மகாராஷ் டிரரும் அந் நேதாஜியே ஆபத்தில் உதவும் வீரன் என்று ஒருமுகமாகக் கூறித் துதித்தனர்.

நேதாஜிக்கும் நெடுநாள் அக் கோட்டையினுள் அடைபட்டுக்கிடக்க மனமில்லை. விரைவில் சிவாஜியைச் சந்திக்கவேண்டும் என்னும் ஆர்வமே விஞ்சி நின்றது. ஆத லின், கடுகிச் சென்று, அக் கொற்றவனைக் கண்டு, துணை பலம் பெற்று வருவதாக வாக்களித்து நேதாஜி புறப்பட்ட னன்.

4

# தலைக்கு வந்தது

அன்றிரவே நேதாஜி ராஜமாளிகையை விட்டுப் பயணமாயினன். எனினும் நான்குபக்கமும் பகைவர் சூழ்ந்திருந்தனர். அவர்தம் கண்ணில் படாமல் செல்லுதல் எங்ஙனம்? அயுப்கானது உடையைத் தரித்து முகம்மதிய வீரனேபோல் நேதாஜி போகத் துணிந்தான். ஒரு சமயம் முகம்மதியரின் கையில் சிக்கிவிடின், விதிப்படியே யாவும் நடக்கும் என்று அவன் மனம் துணிவுகொண்டது. மலையின் அடிவாரத்திலே முகம்மதியர் தங்கி, படைவீடு அமைத்துக்கொண் டிருந்தனர். நாலுபுறமும் காவலாளரை நிறுத்த அன்னவர் மறந்து விட்டனர்போலும். ஆதலின், நேதாஜி மெதுவாக மலையின் உச்சியிலிருந்து ஒரு மரத்தின் வழியே கீழிறங்கிச் செல்லலானுன்.

பாசறை அமைப்பதிலும், இன்னடிசில் சமைப்பதிலும் முனைந்திருந்த முகம்மதியரில் பலரும் அவனைக் கவனிக்கவில்லை. கவனித்த இரண்டொருவரும், "யாரோ நம் படைவீரன் ஒருவன் அவசர வேலையாக விரைந்து செல்கிறுன்" என்றே எண்ணிவிட்டனர். அன்றியும் அவனது கம்பீரமான நடையையும், உயரிய தோற்றத்தையும், வீர விலாசத்தையும் கண்டு அன்னவருக்கு வியப்பு உண்டாயிற்று. அம்மையின் அருளை முன்னிட்டும், தனது மனவலியின் துணைகொண்டும் நேதாஜி அம் முகம்மதியரின் படை வரிசைகளைக் கடந்து சிறிது தூரம் சென்றனன்.

அங்கே மகாராஷ்டிர வேலையாளர் இருவர் தாங்கமுடியாத புல் சுமையுடன் வர, நால்வர் முகம்மதியர் அவர்களைத் தொடர்ந்துவந்தனர். மூட்டையின் பாரம் தாளாமல் தத்தளிக்கும் அப் பணியாளரை முகம்மதியர் ஈட்டிகொண்டு குத்தி, 'விரைந்து செல்' என்று கூறிக் கொடுமை இழைக்கலாயினர். 'பெருஞ் சுமையுடன் கடுகி நடக்க இயலவில்லையே' என்று அவ் விருவரும் ஓலமிட்டும் முகம்மதியரிடம் சிறிதும் இரக்கம் தோன்றவில்லை. அன்னாரிடம் மூர்க்கமே நிரம்பி நின்றது. அதுகண்டதும் நேதாஜிக்கு ஆத்திரம் பொங்கிற்று. பகைவர் அறியாவண்ணம் தப்பிச் செல்வதே கருத்தாயினும், தனது இனத்தார் இருவர் படும் துயரைக் கண்டு அவ் வீரபுருஷன் மனந் தாளாமல் உதவிபுரிய முயன்றனன். அம்முயற்சியில் தனக்கு ஆபத்து நேரும் எனத் தோன்றியும் அதனை அவன் ஒரு பொருட்டாக எண்ணவில்லை.

உடனே அவன் அம் முகம்மதியரை நோக்கி, "என் இக் கொடுமை ?" என்று வினவினன். உரத்த குரலையும் உயரிய உடையையும் கண்டு, அம் முகம்மதியர் முதலில் மதிமயங்கினர். பின்னர் ஒருவன், "ஐய! நாங்கள் எங்கள் கடமையையே புரியாநிற்கின்றோம். நம் குதிரைகளுக்குப் புல் வேண்டும் அல்லவோ? பசுவைக் கும்பிடும் இப் பேதையர் மூட்டை சுமக்கும் மிருகத்தைப்போன்றவர்கள் அலரோ? அன்னவரைக் கடுகி நடக்கச் சொல்வதில் யாது குற்றம் உளது?" என்றனன்.

"வீர! பசுவைக் கும்பிடுவோரும் நம் விஜயபுரி அரசின் குடிமக்கள் அலரோ? ஆதலின், அன்னவருக்குக் கொடுமை இழைத்தல் அடுக்குமோ? சேனாபதியான ஹபிஸ்கானிடம் உங்கள் நடத்தையை உரைத்து, உரிய

சிட்சை கிடைக்கச்செய்வேன்'' என்றனன் நேதாஜி. முகம்மதியரோ அது கேட்டுப் பெரிதும் நகைத்தனர்.

ஒருவன், "ஐய! ஹபிஸ்கானிடமா உரைக்கப் போகின்றீர்கள்? அந்த ஹபிஸ்கானே நேற்றையதினம் கந்தால நகரில் தானியச் சேர் கட்ட மறுத்த மகாராஷ்டிரர் பன்னிருவரை வதைத்துளான். யார் நீ எங்களை அச்சுறுத்துவது? நீ விஜயபுரியின் சேவகன் அல்லன் போலும்?'' என்று கூறவே, மற்றொருவன் தன் கைதனிலிருந்த விளக்கினைத் தூக்கி நேதாஜியின் முகத்தை நோக்கினன்.

நேதாஜியோ முகம்மதிய தளகர்த்தனைப்போல் அயுப்கானது உடையைத் தரித்து வந்தும், தனது நெற்றியில் இருந்த சந்தனத் திலகத்தை அழிக்க மறந்துவிட்டனன். ஆகவே, அதுகண்ட முகம்மதியர், "இவன் முகம்மதியன் அல்லன்; மகாராஷ்டிர வீரனே. நம் படைவலியின் உளவு பார்க்க வந்தவன்'' என்று கூறித் தமது உடைவாளை உருவிக் கொண்டனர். நேதாஜியோ தற்காப்புக்கு வேறு வகை காணாமல் உடைவாளை உருவி நின்று, அம் மகாராஷ்டிரர் இருவரையும் மறைந்தோடும்வண்ணம் சைகை செய்தனன்.

தங்களைக் காக்கக் கருதிய வீரனுக்கு ஆபத்து நேர்ந்திருப்பதை அவ் விருவரும் கண்டதும், ஓட்டம் பிடிக்க உள்ளம் கொள்ளவில்லை. புல்சுமைகளைக் கீழே போட்டு, ஆளுக்கு ஒரு கம்பு கொண்டு, நேதாஜியின்பக்கமிருந்து துணைபுரிய ஆயத்தமாயினர். மூவரின் மனவுறுதியையும், சரீரக் கட்டையும் கண்டவுடனே அம் முகம்மதியருக்கு அச்சம் உதிக்கலாயிற்று. ஆதலின், துணைபலம் தேடக் கருதி, ஆபத்தை அறிவிக்கும் ஊதுகுழல்கொண்டு அன்னார் ஊதலாயினர்.

அக் குழலோசை கேட்டதும், தொலைவிலே பாசறை

நிருமித்துக்கொண் டிருந்த படைவீரர் விரைந்துவரத் தலைப்பட்டனர். நேதாஜியோ, நால்வரின்மீதும் பாயுமாறு தன் துணைவருக்குச் சொல்லித் தானும் பாயத் துணிந்தனன். அச்சமயம் மலையின் ஒருசார், பல மனிதரின் காலடிச் சத்தம் கேட்கலாயிற்று. அஃதறிந்த மகாராஷ்டிரப் பணியாளர் இருவரும் நேதாஜியை இழுத்துக் கொண்டு ஓட்டம்பிடிக்கத் தலைப்பட்டனர்.

நேதாஜிக்கோ ஒன்னலரைக் கண்டு ஓட்டம்பிடிக்க மனமில்லை. ஆயினும் மாற்றானது வலிகண்டு, விரைந்து ஓடுவதே அவ்வேளை விழுப்பந்தரும் எனக்கொண்டு இருவரையும் பின்பற்றலாயினன். ஒரு கணநேரம் அவன் ஆங்கே தாமதித்திருப்பின், பகைவர் வந்து அவனைப் பற்றிச் சிறைசெய்திருப்பர். செய்திருப்பின், மகாராஷ்டிரத்தை மீட்கும் பெருமுயற்சி பங்கமுறும். ராஜ மாளிகையின் கதியை அச் சிவாஜிக்குச் சொல்லவும் வகையிலாது போம்.

அம் மூவரும் ஓட்டம்பிடிப்பது கண்டு, முகம்மதியர் துரத்தலாயினர். 'ஓடுகிறவனுக்கு ஒரு பாதை; தொடர்ந்து போகிறவனுக்கோ ஒன்பது பாதை' என்பது பழமொழி. அம் மூவரும் ஒருவழியே ஓட, முகம்மதியரோ அவ்வழி அறியாமல் வேறுவழியில் சென்று பேதுறலாயினர். எத்துணை தூரம் ஓடியும், மகாராஷ்டிரரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆதலின், அப்பகைஞர் விதியின்றி மனவாட்டத்துடன் வந்த வழியே திரும்பிப் போயினர்.

இரண்டுமைல் தூரம் ஓடியபின்னர், மூவரும் ஒரு மரத்தடியில் படுத்து அயர்ந்தனர். அதிகாலையில் கரிச்சான் குருவி கத்தத் தொடங்கியதும், நேதாஜி கண்விழித்து, வீர சிவாஜி யாங்குள்ளான் என்று தன் துணைவரை வினவினன்.

அவர்கள், "ஐயனே! அவ் வீரசிங்கத்தின் நடமாட்டத்தை யாவர் உணரமுடியும்? காலையில் ஓரிடம், பகலில் மற்றோரிடம், மாலையில் இன்னோரிடமாக இருப்பதே அவரது வேலை. உயிர்த்துணைவரும் அம்மன்னவனது நடமாட்டத்தை முன்னதாக உணரமுடியாது. சில தினங்களுக்குமுன்னே நம் இறைவன் புனாவின்பக்கம் இருந்ததாகக் கேள்வி" என்று சொல்லினர்.

அதுகேட்டு, புனாவின் அருகில் உள்ள லோககூட நகரில் சிவாஜி இருக்கக்கூடுமென்று நேதாஜி கருதி அந்நகர் நோக்கிச் செல்லலாயினன். போகும் வழியிலே, அயுப்கானது குதிரையை விட்டுவந்த வீட்டைஅடைந்து, அப்பரிமாவின்மீது அமர்ந்து, வாயுவேகமாகச் செல்லத் தலைப்பட்டான். அந்திபடும் வேளையில் அந்த லோககூடநகரின் மாளிகைகள் தொலைவில் தென்பட்டன.

அச்சமயம் புதரின் மறைவில் இருந்து மனிதன் ஒருவன் விரைந்து வந்து, "வீர! ஆண்டவன் உனக்கு அருள் புரிவார். ஆபத்தில் அகப்பட்டுக்கொண்டோரை மீட்க மனங்கொண்டுளையோ?" என்று இரந்துவினவினன். காசியையும் தத்தனையும் அழைத்துச் சென்ற ராமனே அம்மனிதன் எனக் கண்டதும், நேதாஜி திடுக்கிட்டு, "அப்பனே! உனக்கு வந்த அவதி யாது?" என்று ஆவலுடன் வினவினன்.

ராமனும் அவ் வீரபுருஷன் நேதாஜியே எனக்கண்டு களிப்பின் மிகுதியினால் கண்ணீர் பெருக்கி, "அவ்விருவரையும் கள்வர் கவர்ந்துசென்றனர். யானோ அன்னவரின் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்து நிற்கிறேன்" என்றான். கள்வரின் தொகை ஒரு நூறு எனக் கேட்டதும், நேதாஜிக்குத் திகைப்பு உண்டாயிற்று. இருவர் ஒரு

நூற்றவரை என்செய்ய இயலும்? எனினும், கள்வர் இருக்கும் இடத்தைக் காட்டுமாறு ராமனை நேதாஜி வேண்டவே, இருவரும் அக் கள்வரின் இருக்கை நோக்கி ஏகினர்.

சிறிது தூரம் சென்றதும், ஒரு மாமரத்தின் அடியில் இருவர் தென்பட்டனர். இருவரில் ஒருவர் துறவி. அவர் பதுமாசனம் இட்டு அம் மரத்தடியில் வீற்றிருந்தார். மற்றவனோ உத்தேசம் இருபது வயதுகொண்ட ஓர் இளைஞன். அவன் அருகே அழகிய பரிமா ஒன்று பாங்காக நின்றுகொண் டிருந்தது. பாலியனது முகத்தோற் றமும் உடல் ஒழுங்கும் கண்டோர் கண்ணைக் கவரும். நோக்கிரண்டும் கருடப் பார்வைபோல் இருந்தன. அருகே சென்று பார்க்கையில், அவனிடம் ராஜலட்சணங்கள் யாவும் நிரம்பியிருந்தன. அவனைக் கண்டதும், நேதாஜிக் குப் பரவசம் உண்டாயிற்று. அதன் காரணம் இன்னது என அவனுக்குப் புலப்படவில்லை.

உடனே நேதாஜி, "யாவர் நீவிர்? கள்வரின் குகை யருகே வீற்றிருக்கக் காரணம் யாது?" என்று வினவினான். கிழத்துறவி அதுகேட்டுக் கூறுவார்: "நாங்கள் இரு வரும் மானிடர் அல்லர். தேவாம்சம் வாய்ந்த புருஷர். நேதாஜி என்னும் வீர! என்னைச் சிஞ்சிவாடி மொரோபா என்பர்; கணபதிதாஸன் என்றும் அழைப்பர் சிறப்பாக. எங்கள் வமிசத்தினரிலே ஏழு தலைமுறையாரிடம் விநாயகக் கடவுள் அருள்புரிவதாக முன்பே வாக்களித்துளான். என்முன்னே நிற்கும் இளைஞனே சிவபெருமானது கூறுகும். மகாராஷ்டிரத்தின் இன்னல் கண்டு மக்களை மீட்க மார்தட்டி நிற்கும் மகாபுருஷன். இவன் உன் வேந்தனும் ஆவன். இன்று பிற்பகலில் நீ இவண் வந்து சேருவாய் என்று அம்மை பவானி உரைக்க, அங்ங

னமே காலைமுதல் காத்து நிற்கிறான் உன் வரவு நோக்கி. மாதிரமலையில் இருந்த யோகியின் அருள் வாய்க்கப்பெற்ற உனது துணைகொண்டே இவன் நம் மகாராஷ்டிரத்தை மகிமையுறச் செய்தல்வேண்டும்."

இங்ஙனம், அத்தவசி விளம்பியவுடனே, நேதாஜி, சிவாஜியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, "அரசே!' அடிமை காத்துநிற்கின்றான் ஏவின வேலை புரிய" என்று உரைத்தனன். உடனே சிவாஜி அவனைத் தூக்கி எடுத்து மார்புறத் தழுவி, "வீர! இப்பெரியார் கணபதியின் அருள் பெற்ற புருஷர். இதில் இம்மியும் ஐயம் இல்லை. யானோ அம்மை பவானியின் அடியான். நாள் தோறும் அம்மை என் கனவில் தோன்றி எனது கடமையை உணர்த்திவருவாள். அதன்படியே இன்றளவும் நடந்துவருகின்றேன். என்றும் அப்படியே நடப்பேன். நேற்றிரவு அம்மை என் கனவில் தோன்றி, இன்று உன் வரவு நோக்கி இவண் இருக்கப் பணித்தனள். இனி நாம் இருவரும் தோரணக்கோட்டை சேரவேண்டும். இதுவே தற்சமயம் கடமையாகும். மகாராஷ்டிரத்தை மீட்கும் முயற்சியில் உயிரையும் வழங்கக் கங்கணம் பூண்டுளேன்" என்றனன். நேதாஜி, "அரசே! எனது உடல், உயிர், உடைமை எல்லாவற்றையுமே தங்களிடம் ஒப்படைத்துளேன்" என்று கூறி மீண்டும் வணங்கினன்.

பின்னர் ராஜமாளிகையின் நிலையும், காசியின் கதியும் சிவாஜிக்குத் தெரிய வந்தன. சிவாஜி அது கேட்டதும் சித்தம் கலங்கி, "என் செய்வேன்? என் படைகள் அனைத்தும் கொங்கணத்தில் உள. தட்சிணத்திலே என் கோட்டைகளைக் காவல் புரிவதற்குரிய வீரர் இலர். என் துணைவரோ சிறு தொகையினர். அன்னவருக்கு உற்ற

உணவும் ஏற்ற ஆயுதமும் உதவ என்னிடம் இரு நிதி இல்லை. எண்ணிறந்தோர் என் சேனையில் சேரக் காத்து நிற்கின்றனர். எனினும் எங்ஙனம் அவர்களைச் சேர்த்துக் கொள்வது ? பொன்மகள் இன்னருள் பூத்தாலன்றி வகையில்லை. நாலைந்து லட்சம் வீரர் என் கைவசம் இருப்பின், யமுனை நதிக்கும் கோதாவரி தீரத்துக்கும் இடையில் உள்ள மகாராஷ்டிரத்தை நொடிப் பொழுதில் மீட்டுவிடுவேன். நல்லது. நான் ஏன் பல பல எண்ணி ஏங்கல் வேண்டும்? தோரணக்கோட்டைக்குப் போகுமாறு பவானியம்மை பணித்துள்ளாள். ஆங்குச் செல்வதே என் கடமை. அவள் இருந்து ஆட்டி வைக்கையில் நான் ஏன் சிந்தாகுலம் எய்தல்வேண்டும் ! லோககூடத்துக்கு அருகே கள்வரின் இருக்கை காணப்படலாகுமோ ? முதலில் அதனைத் தொலைப்பதே என் வேலையாகும். தத்தாஜியையும், காசியையும் மீட்டல்வேண்டும். வேங்கடன் என்பவனே கள்வர் தலைவன். வழிப்பறியே அவன் தர்மமாக உளது. அவனை மாய்த்துவிடின், அவனது துணைவர் அனைவரும் என் சேனையில் சேர்ந்து விடுவர் " என்று கூறினன்.

அத்தருணம் கிழத்துறவி, " அப்பனே! அஞ்சேல்; யான் சென்று அக் கள்வரின் குகையைக் குறுகி, அன்னவரின் நடமாட்டத்தை உணர்ந்து, காளிகோயிலுக்கு எதிரேயுள்ள குதிரை உருவாரங்களின்முன்னே உன் வரவை நோக்கிக் காத்திருப்பேன். நீ வந்ததும் மேல் நடப்பதை யோசித்துக்கொள்ளலாம் " என்று சொல்லி எழுந்து சென்றார். சிவாஜியும் நேதாஜியும் அக் குகையைச் சுற்றியுள்ள பாதைகளை வேவுபார்க்கச் சென்றனர்.

# 5

## காசியைக் காத்தல்

ராமன் என்பானைத் துணைக்கொண்டு காசியும் தத்தாஜியும் ராஜமாளிகையைவிட்டு இரவில் புறப்பட்டனர் என்று மேலே சொன்னோம். அன்று இரவின் முதல் இரண்டு யாமமும் அன்னவர் கடுகி நடந்தபின், நடு நிசியிலே ஒரு மரத்தடியில் படுத்து அயர்ந்தனர். பின்பு கோழி கூப்பிடு முன் கண்விழித்துச் செல்லாநிற்கையில், கள்வர் தோன்றிச் சூழ்ந்துகொண்டு, ராமனைப் பின்கட்டு முறையாகக் கட்டிவிட்டுக் காசியையும், தத்தாஜியையும் தக்க காவலில் அழைத்துச் சென்றனர்.

தத்தாஜி அது கண்டு, கள்வர் தலைவனை நோக்கி, "அப்பனே! ஆண்டவன் உனக்கு அருள் புரிவார். தள்ளாத வயதில் உள்ள என்னையும், இளவயது கொண்ட இப்பெண்ணையும் இட்டுப்போய் என்ன பலன் அடைவாய்! கள்வரும் தெய்வத்தைக் கும்பிடுவது உண்டே. அத் தெய்வம் உனக்குத் துணைபுரியும், எங்களை விடுவிப்பையேல். கடவுளிடம் உனக்கு அச்சம் இல்லையேல், சிவாஜிக்கு அஞ்சியாவது எங்களை விடுவியாயோ? இச் செய்தியை அவ் வீர வேந்தன் உணரின், உனக்கு நாசம் விளையும். உன் கும்பலும் மடியும்" என்று சொல்லினன்.

கள்வர் கோமான் அது கேட்டுக் கைகொட்டி நகைத்து, "நான் கடவுளுக்கும் பயப்படேன்; அக் கடவுளின் அம்சம் எனத் திரியும் சிவாஜிக்கும் அஞ்சேன். எனக்கும் என் துணைவருக்கும் அன்ன வஸ்திரம் தேடிக்கொடுக்

கும் ஈட்டியே என் தெய்வம். அச்சிவாஜி எனக்கு ஒரு பொருட்டன்று. யான் என் கண் எதிரே காணின், இந்த ஈட்டிகொண்டு அவனைக் குத்திக் குமைப்பேன்" என்று கூறினன்.

சிறிது தூரம் சென்றதும், காசியின் பேரழகைக் கண்டு, கள்வர் தலைவனுக்கு ஆனந்தம் உண்டாயிற்று. உடனே அவன் தத்தனை விளித்து, "கிழவா! உன் மகளை எனக்கு மணஞ் செய்துகொடுப்பின், நீ விடுதலை பெறலாம்" என்றனன். தத்தனுக்கு அது கேட்டுச் சினம் பொங்கியது. ஆயினும், 'இல்லாவிடத்துப் பசியும், செல்லாவிடத்துக் கோபமும் இருந்து என்ன பயன்?' என்பதைத் தத்தன் உணர்ந்து, "காணி பூமி இல்லாத கள்வனுக்கு என் குமாரியைக் கொடுப்பதைப் பார்க்கிலும், அவள் மரணத்தையே மேலென மதிப்பேன்" என்று பதில் சொல்லினன்.

சோரர் தலைவன் அது கேட்டு, "இம் மடமை ஏன்? உன்னை மாமனாக அடைய மறுகி நிற்கின்றேன். இன்று நான் கள்வனாக இருக்கலாம். நாளையே கோமானாக ஆகிவிட முடியும். இதற்கு நீ கூறிய சிவாஜியே சாட்சி. நேற்றுவரையில் அச் சிவாஜி கொள்ளைக்காரனாக இருந்தவன். இன்றோ, நீங்கள் அனைவரும் அவனை அரசன் என்று எண்ணி மதிக்கிறீர்கள். அங்ஙனமே யானும் ஏன் விரைவில் வேந்தனாக முடியாது?" என்றனன்.

தத்தாஜி, "திருடர் தலைவ? ஷாஜியின் குமாரனும், உதயபுரி ராஜ பரம்பரையைச் சேர்ந்தவனும், அம்மையின் அருள் பெற்றவனுமான சிவாஜியும் நீயும் சரியோ? யானைக்குப் பூனையை ஒப்பிட ஒண்ணுமோ?" என்றனன்.

கள்வர் தலைவன், "நான் சிவாஜியைவிட உயரத்தில்

மிருந்தவன். அவன் ராஜபுத்திர பரம்பரை என்பது கட்டுக்கதை. கடவுளின் அருள் வாய்க்கப்பெற்றவன் என்பதும் அங்ஙனமேயாம். "தெய்வத்தால் ஆகாது எனி னும் முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும்" என்பதை அறியாயோ நீ? முடிவிலே, யான் கள்வர் கோமானிலி ருந்து குடிகளின் கோமானுக மாறுதல் தேற்றம். இனி உன் சம்மதம் கிடைப்பினும், கிடைக்காது போயினும் காசியை நான் கடிமணம் புரிய இயலும்" என்று கூறிக் காசியின் அருகே சென்று, "நங்காய்! உன் அழகின் உயர்வோ விஜயபுரி அரசையும் கடந்து நிற்கிறது. உன் னைச் சிறை செய்ய யான் எவ்வளவு பாக்கியம் செய் தேனே அறியேன். உன்னை என் மனைவியாகவே மதித்து இட்டுச் செல்கிறேன். இதற்கு உன் அழகே காரணம். கடவுளையும் மானிடரையும் மதிக்காத மகா சூரன் ஒருவனுக்கு வாழ்க்கைப்படுதல் உனக்கு உயர் வன்றோ?" என்று பசப்பினன்.

காசி, "ஐய! மகாராஷ்டிரத்தை மீட்க முயலும் ஒருவ னுக்கே மாலையிட இளமை முதல் நான் விரதம் பூண்டுளேன். ஆதலின், சிவாஜியின் சேனையில் சேர்ந்து, விஜயபுரி அரசை எதிர்த்து, மகாராஷ்டிரத்தை மீட்க முயலுக. அங்ஙன மாயின், மணவினையைக் குறித்து என் தந்தை உம் இஷ் டம்போல் நடப்பார்" என்றனள்.

"பெண்ணே! என்ன புகன்றாய்? வேங்கடவரதன் என்னும் வீரனா சிவாஜியிடம் சேவகத்துக்கு அமர்வான்? அந்த எண்ணத்தை அறவே விட்டுவிடு. உன்மீதுள்ள அன்பினால் நான் கள்வர் தலைவன் என்பதையும் மறந்து தேசாபிமான வேந்தன் ஆவேன் என்பது ஞாபகம் இருக் கட்டும்" என்றனன் வேங்கடன்.

இங்ஙனம் பேசிக்கொண்டே போகையில் ராமன் என்பான் அக் கள்வரில் ஒருவனுன கோபாலனது உதவி பெற்று மெதுவாகத் தப்பி ஓடினன். 'அவன் ஓடின் என்ன? காசி கைவசம் இருக்கிருள்' என்று வேங்கடன் எண்ணி, இருவரையும் தன் குகை கொண்டு சேர்த்து நல்லுணவு ஈந்தனன்.

பகலில் பத்து நாழிகை ஆனதும், தவசி ஒருவர் அக் குகைக்கு எதிரே வந்து அமர்ந்து 'சிவ சிவ' என்று ஜபிக்க லானுர். அவரது தோற்றப் பொலிவைக் கண்டு கள்வர் பலர் அவரைச் சூழ்ந்து நின்று வணங்கினர். கணபதிதாசர் முகம் சுளித்து, "என்னே வணங்க உங்களுக்கு எங்ஙனம் மனம் வந்தது! நீங்களோ கணபதி கோயிலே இடித்துத் தள்ளி, ஆங்கிருந்த பொருள்களைக் களவாடி வந்த வேங் கடனது துணேவர். விக்கிரகத்தை அவன் கவர்ந்து வந்த தும் அல்லாமல், அதனே உருக்கியும் போட்டான். எனவே, அவன் விரைவில் உயிரிழக்கப் போகிருன்! அவனுடன் தாமதிப்பின், நீங்களும் ஆருயிர் இழக்க நேரும். உயிரின் மீது ஆசையுள்ளோர் ஓடிப்போகலாம்" என்ருர்.

தூரத்தில் இருந்த கள்வர் தலைவன் தன் துணேவரை நோக்கி, "அக்கழுதையுடன் உங்களுக்கு என்ன பேச்சு?" என்று உருத்தனன். இதற்குள் சிலர், "ஐயனே! அப் பாவியின் கையில் தாங்கள் சிக்கிக் கொள்ள நேரும்; ஆத லின் ஓடிவிடுங்கள்" என்று கூறினர். கணபதி தாசர், "அன்பரே! எனக்கு ஊறு செய்ய அவனுல் ஆகாது. என் மீதுள்ள கடவுள் அவனுக்குத் தக்க கூலி கொடுப்பார்" என்றனர்.

உடனே வேங்கடவரதன் எழுந்து வந்து அக்கணபதி தாசரைத் தூக்கியடிக்கும்வண்ணம் துணேவருக்குக் கட்

டளை இட்டனன். அவர்களில் ஒருவரும் அதற்கு ஒருப் படவில்லை. பின்னர், அவனே தன் வாள் கொண்டு வீச யத்த னிக்கையில், துணைவர் அனைவருக்கும் முகம் கறுத்தது. அது கண்ட வேங்கடன், தன் உடைவாளை உறையில் இட்டு, ஏதும் உரையாமல் குகைக்குத் திரும்பினான். பின்னர் அத் துறவி, கள்வர்களுடன் தாராளமாகப் பேசத் தலைப்பட் டார்.

"அன்பர்களே! திருட்டுத் தொழிலில் தலையிட்டிருத் தல் தாழ்வன்றோ? மறுமையிலே ஈசனது தண்டனையை அனுபவிக்க நேரும். இகத்திலோ இறைவனது சிட்சை கிட்டும். கள்வர் கோமானுக்குத் துணையாக இருப்பதைத் தவிர்த்து, வீர சிவாஜியிடம் சேர்ந்து சேவிப்பின், இகம், பரம் இரண்டிலும் நீவிர் நலம் பெறலாம். வீணே தத் தனையும் காசியையும் சிறை செய்திருப்பதில் யாது பயன்? அவனோ பெரிய சீமான்! அவனைப் பகைத்துக் கொள்வ தால் உங்களுக்கு நலம் கிட்டாது. தீமையே வந்து சாரும்" என்று நயமும் பயமும் காட்டிப் பேசினர். பல ரும் அச் சொல் கேட்டுச் சிந்தாகுலம் கொண்டனர். இம் மட்டில் இவர்களை நிறுத்தி, சிவாஜியையும் நேதாஜியையும் கவனிப்போம்.

கிடைத்தற்கரிய கன்னிகை கையில் சிக்கினள் எனக் கருதி அக் கள்வர்கோமான் களித்திருக்கையில், தூது வன் ஒருவன் விரைந்து வந்து, "தலைவ! லோக கூடத்தி லிருந்து படை வீரர் புறப்பட்டு வருகின்றனர்" என்று உரைத்தனன். தலைவன் அது கேட்டுத் திடுக்கிட்டுக் குகை யின் வாயில்புறத்தில் மரங்களையும் பாறைகளையும் கொணர்ந்து ஆள் உயரம் பரப்பி, அரண் செய்வித்தான். பின்னர், காசியையும் தத்தனையும் குகையின் நடுவே வீற்

திருக்கச் செய்து, "கண்ணே, உன் கணவன் பகைவருடன் போர் புரியும் ஆற்றலைக் கண்டு களிப்பாயாக" என்று கூறி மகிழ்ந்தான். தன் துணைவர் அனைவரையும் ஆயுதபாணி களாய்க் குகையின் வாயிலில் இருத்திப் பகைவரின் வரவை எதிர்நோக்கி இருந்தான்.

அத்தருணம் வீரன் ஒருவன் கடுகிவந்து வேங்கட வரதனை அணுகி, "கள்வர் தலைவ! சிவாஜி வேந்தன் விடுத்த தூதன் யான். தத்தாஜியையும் காசியையும் நீ சிறை செய்திருத்தல் கேட்டு, அம் மன்னர் சீறி நிற்கின்றனர். ஆதலின் நீ உன் பெரும் பிழையை உணர்ந்து, அவ்விரு வரையும் உடனே விடுவிப்பின், உயிர்ப் பிச்சை பெறலாம். இன்றேல், இன்றே எமபுரம் சேர்தல் தேற்றம்" என்று சாற்றினன்.

வேங்கடவரதன் அது கேட்டு, "வீர! உன்றன் வேந்தன் வலியையும் என்றன் திறத்தையும் வாள்முனை யில் காணவேண்டுமே அன்றி, வாயளவில் யான் உணர்த்த விரும்பவில்லை. காசியோ என் தேவி ஆயினள். அவளே அதற்கு இணங்கியுள்ளனள். யானும் அச் சிவாஜி யைப் போன்ற கள்வனே; அவனினும் யான் வலியன் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும். காசியையும் தத்தனை யும் குகைவாயிலின் நடுவே அரணுக்குப்பின் வைத்துளேன். அவர்களை மீட்க வந்து தாக்குவோர் ஆயுதம் எறிந்தால் அவர்களுக்கே முதலில் ஊறு நேரும். நேரின் அப்பாவம் சிவாஜியின் சிரத்தில் சுமரும்." என்று சொல்லி விடுத்தனன்.

அங்ஙனமே வீரன் ஓட்டமும் நடையுமாகச் சென்று சிவாஜியிடம் செய்தி சொல்லினன். காசியை அக் கள்வர் தலைவன் வைத்திருக்கும் நிலைமை கேட்டு, சிவாஜியும்

நேதாஜியும் சிந்திக்கலாயினர். காசிக்கு ஓர் ஊனமும் இன்றி அக் கள்வர் தலைவனை மாய்த்து அவளை மீட்கவேண்டும் என்பதே சிவாஜியின் கவலையாக முடிந்தது.

நேடு நேரம் யோசித்தபின்னர், "படைகளை மூன்று பிரிவாகப் பிரித்து, ஒரு பிரிவு குகையின் முகப்பில் தாக்குவதுபோல் பாசாங்கு பண்ணவேண்டும். அப்போது மற்றைய இரு பிரிவினரும் குகையின் வலதுபக்கமும் இடதுபக்கமும் கள்வருக்குத் தெரியாமல் மறைந்து, திடீரென்று தாக்கின், இடப்புறமும், வலப்புறமும் கள்வர் போர் புரியத் தொடங்குவர். எதிரேயுள்ள வகுப்பும் போருக்குப் புறப்பட்டால், கள்வருக்குத் திகைப்பு ஏற்படும். அவ்வேளை பார்த்து, நாம் குகையின் வாயிலில் புகுந்து காசிக்கு ஊனம் இல்லாமல் பார்த்துக்கொள்ளலாம்" என்று நேதாஜியும் சிவாஜியும் தீர்மானித்தனர்.

குகையின் வாயிலுக்கு எதிரே ஒரு சிலருடன் சிவாஜி நின்றுகொண்டு தாக்கலாயினன். அங்ஙனமே சிவாஜியின் வீரர், தாக்கப் போவதும் பின் வாங்குவதுமாகப் பாசாங்கு செய்தனர். அவ்வாறு அரைமணி நேரம் மாயப் போர் நடக்கையில், கள்வரோ வேறு எப்பக்கமும் பகைவர் இல்லை என்று எண்ணி, சிவாஜியின் வீரரையே குறிக்கொண்டு நின்றனர். இதற்கிடையில், குகையின் வலப்பக்கமும், இடப்பக்கமும் வேறு வீரர் அக் கள்வர் அறியாவண்ணம் குகையைக் குறுகலாயினர். அச்சமயம் சிவாஜி ஒரு கொடியை விரித்துச் சைகை காட்டினன். வலப்பக்கம் இருந்த நேதாஜியோ தன் கைதனிலிருந்த பெரிய கோடரி கொண்டு குகைக்கு அருகக் கிடந்த மரத்தைப் பிளந்து முன் நின்றனன். அவனது வலிவு கண்டு கள்வர் தலைவன் கதி கலங்கிப்

பின் வாங்கலானுன். உடனே நேதாஜி உரத்த குரலில், "சிவாஜியின் சிற்றத்துக்கு ஆளாக விரும்பாதோர் குகையின் முகப்பில் நில்லாமல் உட்புறம் ஒதுங்கியிருத்தல் நலமாகும்" என்று கூறினன்.

கோபாலனும், கள்வரில் கோழைகளும், வேங்கடவரதனிடம் விசுவாசம் இல்லாதவர்களும் குகையின் உட்புறத்தில் ஒதுங்கிக்கொண்டனர். காசியும் தன் தந்தையுடன் ஒரு மூலையில் பதுங்கிக்கொண்டாள். வேங்கடவரதனே கோழையன்று; பெருவீரனே யாவன். அவனே நேதாஜி வந்த பக்கம் நின்றுகொண்டு வீரம் விளைக்க முயன்றனன். நேதாஜியின் முன்னேற்றம் கண்டதும் தனது பெரிய வாளை உருவி நேதாஜியின்மீது வீசினன். அச்சமயம் நேதாஜியின் அருகே யாரும் இல்லை. துணைவரோ இன்னும் குகையின் முகப்பில் வந்து சேர்ந்திலர். கள்வர்கோமானது வாளோ நேதாஜியின் சிரத்தை நோக்கிப் பாய்ந்தது. நேதாஜி அது கண்டு, தனது கோடரி கொண்டு அவ் வாளைத் தடுக்கவே கோடரியின் காம்பு முறிந்து கீழே விழுந்தது.

உடனே உடைவாளை உருவ நேதாஜிக்கு நேரமில்லை. ஆதலின் கோடரிக் காம்பு கொண்டே கள்வனை எதிர்க்கலாயினன். பகைவனது வாளும் கோடரியில் தாக்கி வளைந்து போய், இலக்குத் தவறிவிட்டது. எனினும், கள்வர் தலைவனின் துணையாளர் அதற்குள் நேதாஜிக்குக் கையிலும் காலிலும் காயம் உண்டுபண்ணினர். இதற்குள் வேங்கடவரதன் வேறொரு வாளை உருவி நேதாஜியின்மீது பாய்ந்தான்.

கோடரிக் காம்புடன் நின்ற நேதாஜி என் செய்வான்? திகைப்புக் கொள்ளாமல், வருவது வருக என்று

வீரத்துடன் நின்றனன். அச் சமயம் சிவாஜி முன்னேறி வரவே அவனது உடைவாள் வேங்கடவாதனது விலாவின் வழியே நெஞ்சத்தைப் பிளந்து போட்டது. கள்வர் தலைவன் கீழே வீழ்ந்தவுடனே ஏனைய கள்வர் கும்பிட்ட கையினராய்த் தரையில் வீழ்ந்து, அபயம் வேண்டினர். உடனே குகையைச் சோதித்துப் பார்க்கவே, கணபதி கோயிலிலிருந்து களவாடிய ஏராளமான பொருள்கள் அகப் பட்டன. அவற்றை எல்லாம் கணபதிதாசருக்குக் கொடுத் தான் சிவாஜி. பிற பொருள்களையோ தன் துணைவருக் கும், கள்வருக்கும், கோபாலனுக்கும் அவன் பகிர்ந்து கொடுத்தனன். உடனே, கள்வர் அனைவரும் சிவாஜியின் சேனையில் சேர்ந்துகொண்டனர். பின்னர், தத்தனை ஒரு குதிரைமீதும், காசியைப் பல்லக்கிலும் வைத்து லோககூடக் கோட்டைக்கு ஏவலாளர் இட்டுச்சென்றனர்.

# ௬

# நேதாஜியின் போர்த்திறன்

மாலைப் பொழுதிலே நேதாஜியும் சிவாஜியும் மேல் நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது சிவாஜி, "நண்ப! மாவலரில் நாற்பதாயிரவர் நம் படையில் சேரப் பதறி நிற்கின்றனர். அன்னாருக்கு நான் எங்ஙனம் ஆயுதங்கள் தேடித் தருவேன்? தட்சணத்திலும் கொங்கணத்திலும் உள்ள மலைக்கோட்டைகள் அனைத்தும் அம்மையின் அருளால் என் கைவசம் ஆகியுள்ளன. அவைகளையும் பழுது பார்த்து நன்னிலையில் வைக்க, மிகுந்த திரவியம் தேவை. அம்மை அருளியவண்ணம் என் துணைவன் நேதாஜியுடன் தோரணைக் கோட்டைக்குச் செல்வேன். என் கவலை தீர அங்கே வழிபிறக்கும், என்பது எனது நம்பிக்கை. இல்லையேல் நான் யோகியாகிக் கானகம் ஏகிவிடுவேன். பின்னர் மகாராஷ்டிரத்தை மீட்கும் பொறுப்பு உன்போன்ற வீரரின் தலையில்தான் சுமரும்" என்று சாற்றினன்.

நேதாஜி அது கேட்டு, "அரசே! அதைரியம் ஏன்? அம்மையின் அருள் இருக்க, நாம் எதற்கும் சிந்தாகுலம் கொள்ளவேண்டியதில்லை. எனக்கு ஆணையிடும் பாக்கியம் தங்களது. அதனைச் சிரமீது கொண்டு சேவை புரிதல் எனது கடமை. மாதிரமலையில் இருந்த பெரியாரோ தாங்கள் சக்கரவர்த்தியாக விளங்குவீர்கள் என்றும், நான் தங்கள் வலது கரம்போல் திகழ்ந்து வீரம் விளைப்பேன் என்றும் அருளிப்போனர். அப்பெரியாரின் திருவாக்கு

வீண்போமோ? அதனை நம்பியே நான் தங்களை வந்து சேர்ந்துளேன், இனியபணியாளனாக'' என்றனன்.

"இப் பெரிய போராட்டத்தில் எனது வலது கை போல் விளங்குவோனுக்கு நான் என்ன கைம்மாறு புரிவேன்?'' என்றனன் சிவாஜி. நேதாஜி, "என் ஐய! கைம்மாறு ஒன்றும் வேண்டாம். தங்கள் மதிப்பு ஒன்றே எனக்குப் போதும். ஆனால், ஒரு வெகுமதிமட்டும் உங்களைக் கேட்பேன். காசியும் நானும் இளமைமுதல் காதல்வலையில் பட்டுள்ளோம். குழந்தைப் பருவத்தில் கூடி விளையாடுகையில், "மகாராஷ்டிரத்தை மீட்பின், எனது மணமாலையைப் பெறலாம்'' என்று சொல்லி அவள் என்னை உத்ஸாகப்படுத்தினள். ஆதலின் அம் மங்கையை எனக்கு மணம் புரிவிப்பின் எனது உத்ஸாகம் ஓங்கி வளரும். ஒருவேளை அது முடியாமல் போயினும், வீரம் விளைத்துச் சேவை செய்வதில் யான் இம்மியும் பின்வாங்கேன்; இது சத்தியம்'' என்றனன்.

அங்ஙனமே செய்வதாக சிவாஜி வாக்களித்து, தத்தனிடம் விஷயத்தை விளம்பினான். தத்தனே முதலில் அதற்கு மனம் ஒப்பவில்லை. நேதாஜியின் குடும்பம் கௌரவம் வாய்ந்ததே ஆயினும், பணம் மிகப் படைத்தது அன்று என்பதே தத்தன் தயங்கியதற்குக் காரணம். முடிவில், சிவாஜியின் கருத்தை மதித்தும், நேதாஜியின் சகாயத்தை எண்ணியும், காசியின் கருத்தைக் கவனித்தும் தத்தன் அதற்கு ஒருவாறு இசைந்தனன். அங்ஙனமே மணவினை நடந்தேறியது.

அன்று இரவில் நேதாஜியும் காசியும் கரைகடந்த ஆனந்தத்தில் ஆழ்ந்து அளவளாவிக்கொண் டிருந்தனர். கண்ணே, காசி! நீ சிறைப்பட்டாய் என்று கேட்டதும்

கவலையுடன் கிளம்பி வந்தேன்'' என்றான் நேதாஜி. காசியோ, "அன்பே! எங்ஙனமேனும் எங்களை நீ மீட்பாய் என்று நான் நிச்சயமாக நம்பியிருந்தேன். குகையின் வலப்பக்கம் கையில் கோடரிகொண்டு பகைவரை வெட்டித் தள்ளுகையில், உன்னைப் பார்க்க எனக்குப் பயங்கரமாகவே இருந்தது. வேங்கடவரதன் தனது உடைவாள் கொண்டு உன்னை வெட்ட விரும்பிய காலையில், யான் உள்ளமும் உடலும் ஒருங்கே நடுங்கினேன். உடனே எழுந்து வந்து உனக்குத் துணைபுரிய எண்ணினேன். ஆயினும் ஒரு பெண்பால் என்ன செய்யமுடியும்? நீ வெற்றிமாலை சூடுவாய் என்று நிச்சயமாக நம்பியிருந்தேன். ஆண்டவனே உனக்கு அருள் புரிந்தார்'' என்று சொல்லிக் களித்தனள். இங்ஙனம் இருவரும் பேசிநிற்கையில் பொழுது புலர்ந்துவிட்டது.

அதிகாலையிலே அவன் சிவாஜியுடன் தோரணக் கோட்டைக்குச் செல்லப் புறப்பட்டனன். இருவரும் ஐம்பது மைல் தூரம் குதிரை சவாரி செய்தபின்னர் மாலையிலே தோரணக் கோட்டை போய்ச்சேர்ந்தனர். ஆங்கிருந்தோர் அவ் விருவரையும் பயபக்தி விசுவாசத்துடன் வரவேற்கத் தவறவில்லை. உண்டி கொண்டபின்னர் இருவரும் நெடுநேரம் அளவளாவியிருந்தனர்.

சிவாஜிக்கோ உறக்கம் பிடிக்கவில்லை. மேலே நடப்பது என்ன என்று எண்ணித் தன்னை மறந்து அம்மையைத் துதிக்கலானான். நேதாஜியும் அம்பிகையைத் துதித்துக் கண்மூடினன். மூடியதும், அம்மை பவானி அவன் கனவில் தோன்றி, "அன்ப! உன் அரசன் ஏன் மனம் கலங்குகின்றனன்? தோரணக்கோட்டையின் பின்புறத்தே பெரும் புதையல் உளது. அதனைக் கொண்டு ஆயுதம்

முதலியன வாங்கி, மகாராஷ்டிரத்தை மீட்க முயலுவீராக" என்று அருளி மறைந்தனள். அங்ஙனமே அதிகாலையில், அவ்விடத்தைத் தோண்டிப் பார்க்கவே இருபது பெரும்பானைகள் நிரம்பத் தங்கமும் ரத்தினங்களும் அகப்பட்டன. அப் பெருநிதி கொண்டு சிவாஜி ஏராளமான ஆயுதங்கள் வாங்கி, மாவலரை ஆயிரக் கணக்கில் சேனையில் சேர்த்து, கோட்டைகள் அனைத்தையும் பழுது பார்த்தனன்.

உடனே விஜயபுரியின் முக்கிய நகரமான கல்யாணம் என்பதை முற்றுகைபோட ஒரு சிறிய படை வகுப்புடன் அப்பாஜிசான்தேவன் என்பான் சென்றிருப்பதை மதித்து, அவனுக்குத் துணைபோகவேண்டும் என்று சிவாஜியும் நேதாஜியும் புறப்பட்டனர்.

அவ்வாறு செல்லுகையில், விஜயபுரிக்கு ஏராளமான திரவியங்களை ஒட்டைகளில் ஏற்றிக்கொண்டு முகம்மதியச் சேனை போகும் செய்தி இருவருக்கும் தெரிய வந்தது. உடனே சிவாஜி, நேதாஜியை நோக்கி, "அன்ப! அப் பணம் விஜயபுரி போய்ச் சேர்வதோ? முந்நூறு குதிரைவீரருடன் நீ உடனே பயணமாக வேண்டும். அப்பால் யான் வருவேன் துணைவருடன். பின்னர் இருவருமாகச் சேர்ந்து, அப்படையை எதிர்க்காலம்" என்றனன். கண நேரமும் தாழ்க்காமல், நேதாஜி முந்நூறு பரிவீரருடன் புறப்பட, ராமனும் அவனுக்குத் துணையாக உடன் சென்றனன்.

சிறிது தூரம் போனவுடனே விஜயபுரியின் படை தென்படலாயிற்று. சதுக்க நகரம் சேர்ந்ததும், விஜயபுரிச்சேனையை நெருங்கினன் நேதாஜி. அக் கிராமத்திலே தன் தந்தையைப் பார்க்கவேண்டும் என்று அவனுக்கு

ஆவல் மிகுந்தும், கடமையைவிட்டுச் செல்ல அவன் இஷ்டப்படவில்லை. பகைப்படையிலே நானூறு குதிரை வீரர் இருந்தனர். நேதாஜியின் முந்நூறு வீரவரும் போரில் சிறிதும் பழகியவர் அல்லர். போருக்குரிய சிறந்த ஆயுதமும் அன்னவரிடம் இல்லை. ஆதலின், பகைப் படையை எதிர்க்காமல் துரத்திக்கொண்டே போயினன் நேதாஜி.

அச் சமயம் நேதாஜி கையாண்ட தந்திரம் சாலச் சிறந்ததாகும். விஜயபுரிச் சேனையை அவ் வீரன் துரத்திச் சென்று நெருங்குவான். ஆனல் கைகலக்க நேர்ந்தவுடனே பின்வாங்குவான். விஜயபுரிப் படையோ அடிக்கடி திரும்பிப் பகைவரை எதிர்க்க முயலும். எனினும் மகாராஷ்டிரர் பின்வாங்கிவிடுவதால் அவ் விஜயபுரி வீரர் அலைக்கழிவு அடைவர். முடிவில் முன்னே விரைந்து செல்லுதலே சிறப்புடைத்து என்று விஜயபுரிப் படை உணர்ந்துகொண்டது.

ஆதலின், சிவாஜி வந்து சேரும் அளவும், அவர்களை வழிமறித்து நிற்கக் கருதினன் நேதாஜி. சதுக்க நகரத்திற்கு ஐந்து மைல் தூரத்திலே சாலபுரம் என்னும் நகரம் உளது. அந் நகரின் பக்கம் பள்ளத்தாக்கு ஒன்று உண்டு. அப் பள்ளத்தாக்கின் முகப்பில் நிற்குமாறு ராமனை ஒரு நூறு வீரருடன் நேதாஜி அனுப்பினன். அங்ஙனமே ராமன் நூறு வீரருடன் முன் சென்று அப்பள்ளத்தாக்கின் வாயிலில் நின்றுகொண்டு, அக் கிராமத்தாரின் உதவி பெற்றுப் பாதையை மரமும் கல்லும் போட்டு வழி மறித்தனன்.

விஜயபுரிப் படைவகுப்பு சாலபுரகிராமம் சேர்ந்தவுடனே வழி மறிக்கப்பட்டிருத்தல் கண்டு திகைப்புக் கொண்டனர். அப் பள்ளத்தாக்கின் வழி

யைத் தவிர்த்து வேறு வழியும் இல்லை. ஆதலின் துரத்திவரும் படையைத் தாக்குமாறு விஜயபுரிப் படைத் தலைவன் உத்தரவிட்டனன். நேதாஜியோ போர் முறையின் தந்திரத்தைக் கையாண்டு பின்வாங்கினன். நெடுந்தூரம் மகாராஷ்டிரப் படையைத் துரத்திச் செல்ல விஜயபுரி வீரர் விரும்பவில்லை.

நெடுந்தூரம் சென்றுவிடின், பணச் சுமை தாங்கி நிற்கும் ஒட்டைகள் காவலின்றிப் போய்விடும். எனவே விஜய புரி வீரர் திரும்பினர். உடனே நேதாஜி அவர்களைத் துரத்தலானான். இதற்கிடையில் கிராமவாசிகள் இவ் வேடிக்கையைப் பார்க்க வந்து கூடினர். முகம்மதியரின் திக்கற்ற நிலைகண்டு, மகாராஷ்டிரரின்பக்கத்திலே கிராம வாசிகளில் பலர் சேர்ந்துகொண்டனர்.

விஜயபுரித் தளகர்த்தன் முன்னும் போக முடியாமல், பின்னும் போக இயலாமல் தத்தளித்தனன். முடிவில் நேதாஜியை வரவழைத்துச் சமரஸம் பேசலாயினன். நேதாஜியைக் கண்டதும் அவன், "மருளும் மான் போன்ற நீங்கள் புலியைத் தொடர்தல் ஆச்சரியமே" என்று ஏளனமாகப் பேசினன்.

நேதாஜி, "நல்லது புலி என்ற நீங்கள் மான்களைக் கண்டு மருண்டு ஓடுவதேன்? விஜயபுரி வீரருக்கு மகாராஷ்டிரர் இம்மியும் சளையார். ஆயினும், இரு மடங்கு வன்மை கொண்ட உன்னுடன் இச் சமயம் போர் புரிய இஷ்டமில்லை. கேலிப் பேச்சுப் பேசவா என்னை அழைத்தனை?" என்றனன் நேதாஜி. முகம்மதியன், "நாங்களோ ஏராளமான பணம் கொண்டு விஜயபுரி செல்கிறோம். அதனைப் பராக்கிரமத்தினால் பறிக்க, உன்னால் ஆகவில்லை. உன் கொள்ளைக் கூட்டத்

தைப் போகச் சொன்னல், உனக்கு ஐந்நூறு ரூபாய் வெகுமதி தருவேன். எங்களுடன் எதிர்த்து உயிரிழப்பதி லும் இது சிறப்பன்றோ ?" என்றனன்.

நேதாஜி அதுகேட்டு, "நாங்கள் கொள்ளைக் கூட்டத் தினர் அல்லர். சிவாஜி வேந்தனது சீரிய வீரர். அவனே மகாராஷ்டிரத்தை மீட்க முனைந்திருக்கின்றான். உன் இழி சொற்களைக் கேட்ட எனக்கு வாளை உருவி உன் தலையை வாங்கவேண்டும் என்பது எண்ணம்" என்று கனன்று கூறினன். உடனே உடைவாளில் அவன் கை சென்றது.

முகம்மதியனும் தன் உடைவாளில் கைபோட்டு, "பலர் என்னைப் போர் முனையிலும் தனிமையிலும் ஆவி கவர அரும்பாடுபட்டனர். ஆயினும், ஆகாதுபோயிற்று. வாள் உருவின நீயே மரிக்க நேரும். உன் வீரர் சளையார் என்கிறாய். என் பக்கம் ஐவர், உன்பக்கம் ஐவர் நின்று போர் புரியட்டும். யார் வன்மை படைத்தோர் என்பதை அதன் முடிவே உணர்த்தும்" என்றனன். "நல்லது" என்று நேதாஜி சம்மதித்தனன். "இந்த ஏற்பாடு திட்ட மாகிச் சண்டை தொடரச் சிறிது நேரம் ஆகும். இதற்குள் சிவாஜி வந்துவிடுவான். வாராது போயினும் ஒருகை பார்த்துக்கொள்ளலாம்" என்பதே நேதாஜியின் கருத்துப் போலும்.

குதிரையினின்று போர் செய்வதா? தரையில் நின்று சமர் புரிவதா என்று முதலில் தீர்மானம் ஆகவேண்டி இருந்தது. முகம்மதியனே தரையில் நின்று சமர் செய்ய லாம் என்றனன். குதிரைவீரர் தரையில் இறங்கிச் சண்டை செய்தல் தகாது என்று நேதாஜி தர்க்கம் செய்யவே, முகம் மதியன் அதற்கு இசைந்தனன்.

இருபக்கத்துத் துருப்புக்களும் வழி நடந்து களைத்திருப்பதால் இரண்டு மூன்று மணி நேரம் கழித்தபின்னர் கைகலக்கலாம் என்றான் நேதாஜி. இதற்கும் அம் முகம்மதியன் மனம் ஒப்பினன். இருபக்கத்துத் தலைவரும் தத்தம் படைவகுப்பை நண்ணி நடந்ததை நவின்றனர். முகம்மதியருடன் மொய்யமர் புரியச் சமயம் வாய்த்ததே என்று நேதாஜிக்கும் அவன் துணைவருக்கும் ஆனந்தம் பொங்கிற்று. ஒவ்வொருவரும் தான் முன்னே, தான் முன்னே என்று மார்தட்டி முன்வந்தனர்.

நேதாஜி, "நானே முதலில் போரில் இறங்குவேன்" என்று சொல்லிக்கொண்டான். பலர் தடுத்துப் பார்த்தும் பயன்படவில்லை. வேறு நால்வர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மூன்று மணி நேரம் ஆனதும், போர் முரசு சப்திக்க, இரு பக்கத்திலிருந்தும் ஐந்து ஐந்து பேர் முன்னே வந்தனர். முகம்மதியத் தலைவனை நேதாஜி எதிர்த்தான்.

உடனே விஜயபுரி வீரர் அனைவரும் சேர்ந்து நேதாஜியை எதிர்க்கத் தலைப்பட்டனர். துரோகச் செயலை உணர்ந்த நேதாஜி, "ஹரஹர மகா தேவ" என்று சீறிக்கொண்டு. முகம்மதியத் தலைவன்மீது பாய்ந்து, அவனைக் கீழே தள்ளித் தனது குதிரையின் கால்கொண்டு கொன்று வீழ்த்தினன். பின்னர், முகம்மதியன் படை வரிசையில் புகுந்து வாளை இங்கும் அங்கும் வீசினன். ஆவேசத்துடன் போர் புரியும் நேதாஜியைக் கண்டு முகம்மதியர் கதிகலங்கினர். சிலரோ ஈட்டிகொண்டு அவனை விலாவில் குத்தினர். ஆயினும், இரும்புக் கவசம் அவனைக் காத்தது. பின்னர் நேதாஜி, முகம்மதியரைத் துரத்திக்கொண்டே நின்றனன். அச் செய்தி கேட்டராமன் தன் துணைவர் நூற்றுவருடன் சமரில் புகுந்தனன்.

முகம்மதியப் படைகள் இரு பக்கத்திலிருந்தும் தாக்கப்பட்டும் அன்னவரின் மூர்க்கம் கொஞ்சமும் தணியவில்லை. சிவாஜியின் மாவலரும் இதற்குள் வந்து சேர்ந்து, முகம்மதியரைச் சின்னபின்னஞ் செய்யத் தலைப்பட்டனர். முடிவில் சண்டையின் உக்கிரத்தினால் நேதாஜி களைத்துச் சிவாஜியின் கையில் சாய்ந்தனன். சிவாஜியோ எஞ்சி நின்ற முகம்மதியருக்கு உணவு கொடுத்து உயிர்ப்பிச்சையும் தந்து, ஊருக்கு அனுப்பி, நிதி அனைத்தையும் கைப்பற்றிக் கொண்டான். பின்பு சிவாஜியின் கட்டளைக்கு இணங்கிக் கல்யாண நகரை முற்றுகையிட்டு நிற்கும் அப்பாஜிக்குத் துணையாக நேதாஜி செல்லவே சிவாஜியோ அத் திரவியத்தை எடுத்துக்கொண்டு ராஜகிரிக்குச் சென்றனன்.

7

# வெற்றி யாருக்கு

நேதாஜியோ கல்யாணி நகரை முற்றுகையிட்டு நிற்கும் சேனைத்தலைவன் அப்பாஜி சான்தேவனைக் குறுகினன். அந்நகரம் ஆரும் நூற்ருண்டில் மகாராஷ்டிரத்தின் தலைநகராக விளங்கிய விழுமிய பட்டணம். அது நதிதீரத்தில் உளது. விஜயபுரி அரசினுக்கு உட்பட்டிருந்த காலத்திலே அந் நகர் ஏழாயிரம் ஏகர் விஸ்தீரணம் கொண்டது. அதனைச் சுற்றிப் பெரிய மதில் சுவர் ஒன்று உண்டு. நகரின் வடமேற்குக் கோடியிலே பெரிய கொத்தளம். கொத்தளத்துக்கும் நகருக்கும் இடையே பெரிய அகழ். கொத்தளமோ தக்க பாதுகாப்பு வாய்ந்தது. நகரின் மதில் சுவரிலே அங்ஙனம் பாதுகாப்பு இல்லை. நகரின் உள்ளே அழகிய மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் அனந்தம். நகரின் வடக்கிலும் கிழக்கிலும் உள்ள பிரதேசம் மிகச் செழுமை பொருந்தியது; விலையுயர்ந்த பழ மரங்கள் நிரம்பிய சோலை கொண்டது. முற்றுகை செய்து நின்ற காலம் சித்திரைக் கோடையில், அக்கினி நட்சத்திரப் பருவம்.

நேதாஜியின் துணை பெற்றவுடனே அப்பாஜிக்கு ஆறுதலும் களிப்பும் பிறந்தன. நாள்தோறும் காலையில் இருந்து உச்சிப்பொழுதுவரையில் கொத்தளத்தை நோக்கிப் பீரங்கிகொண்டு அப்பாஜி குண்டு மழை பொழிவான். உச்சிப்பொழுதிலிருந்து வெயில் தணியும்வரையில்

குண்டுப் பிரயோகம் செய்வதில்லை. இதனால் நகரின் காவல்படைகள் அனைத்தும் கொத்தளத்தின்பக்கமே குவிந்துகிடக்கும். கொத்தளத்தின்மீது குண்டு மழை பொழிவதைக் கண்டு, நகரின் துருப்புகள் அனைத்தும் கொத்தளத்தை நண்ணவேண்டும் என்பதே அப்பாஜியின் கருத்தாகும். அந் நிலையில், நகருக்குச் சரியான காவல் இல்லாதுபோதல் வெளிப்படை.

இங்ஙனம் சின்னாள் சமர் நடவாநின்றது. ஒரு நாள் நேதாஜி தன் மாவலத் துணைவரில் இருநூற்று வரை உடன்கொண்டு, அதிகாலையில் புறப்பட்டு, அச் சோலையின் வழியே மறைந்து சென்று, உச்சிப்பொழுதில் கவலாளர் எவரும் இல்லாத சமயம் பார்த்து, மதிலின் மீது நூலேணி வீசி ஏறி உள்ளே குதித்தனன். அவனைத் தொடர்ந்து நூற்றுக்கணக்கான மாவலரும் நகரினுள்ளே புகுந்தனர். வெயில் வேளை ஆதலின், காவலாளிகள் அயர்ந்து ஒரு மூலையிலே நித்திரை செய்து கிடந்தனர். மாவலர் உள்ளே புகுந்தபின்புதான், காவலாளருக்கு உறக்கம் நீங்கிற்று. உடனே அன்னார் கூக்குரலிட்டும், துணைப்படைகள் வருவதற்குள் நகரமோ நேதாஜியின் கைவசம் ஆகிவிட்டது. அப்பால் வந்த துணைப்படைகளோ நேதாஜியின் கையில் சிக்கிச் சின்னபின்னமாயின. நகரம் கைவசம் ஆனபோதிலும், கொத்தளம் விழவில்லை.

முல்லானா ஆமது என்னும் தளகர்த்தன் அங்கே இருந்துகொண்டே விடாப் பிடியாகப் போர் புரிந்து நின்றனன். அப்பாஜி அது கண்டு, பிரங்கிகளை அக் கொத்தளத்தின் அருகே கொண்டுவந்து நிறுத்தவே, அவை குண்டு மழை பொழியலாயின. நாளடைவில் கொத்தளம் குலைந்து விழவே, முல்லானா விதியின்றிப் பணிந்தனன். நேதாஜியும்

அப்பாஜியும் பெருந்தன்மை கொண்டு, அத் தளகர்த் தனது வீரத்தைப் பாராட்டி, உரிய மரியாதையுடன் அவனை விஜயபுரிக்கு அனுப்பினர். கல்யாண்நகரம் கைவசமானது மகாராஷ்டிராருக்குப் பெருத்த வெற்றி யாகும். அதற்கு மூலகாரணம் நமது நேதாஜியின் தீரச் செயலேயாம். ஆனதுபற்றி அப்பாஜி ஒரு விருந்து நடத்தினன், நேதாஜிக்கு. அறுசுவையும் கலந்த உண்டி வகைகள் அவரவரின் மதாசாரத்திற்கு ஏற்றவாறு அனை வருக்கும் வழங்கப்பட்டன. உண்டியானதும், மகாராஷ் டிர வீரரில் பலர் தத்தம் வாளாற்றலைக் காட்டத் தலைப் பட்டனர்.

வான் வரிசையில் வல்லோர், ஒருவரது தலையில் எலுமிச்சம் பழத்தை வைத்துத் தலைமயிர் ஒன்றுகூட வெட்டுப்படாமல் பழத்தை இரு துண்டாக்கிக் காட்டினர். பரி வீரரோ நாலுகால் பாய்ச்சலில் குதிரையை விரட்டி அவ் வேகத்தில் குறி பார்த்து இலக்குத் தவறுமல் குத்தீட்டியை எய்தனர். இன்னும் எதிரியை ஈட்டிகொண்டு குத்தப்போவதுபோல் குதிரைமீது கனவேகமாகச் சென்று, குதிரையேற்றத் தின் கோலத்தைக் காட்டினர். இத்தகைய போர் புரிவதில் மகாராஷ்டிரர் மகா வல்லவராதலின் எதிரி களை வெற்றிகொள்ளுதல் அவர்களுக்கு மிக எளிதாகும். அம்பு எய்தலில் சமர்த்தரானோர் அப்பயிற்சியின் அருமை பெருமையை உணர்த்தினர். இங்ஙனம் விளையாட்டு முடிந்தபின்னர், நேதாஜிக்குப் பட்டுப் பீதாம்பரம் பரிசளித்தான், அப்பாஜி. ஏனைய வீரருக்கும் தக்க வெகுமதிகள் வழங்கப்பட்டன.

அந் நிலையில், தூதன் ஒருவன் தள்ளாடித் தள்ளாடி வந்து அப்பாஜியைக் கண்டனன். மரணக் களைப்பு அத்

தூதுவனை மூடிக்கொண் டிருந்தது. அவன் ஆடை அனைத்தும் அழுக்குப் படிந்திருந்தது. அவன் தோற்றமும் குலைந்திருந்தது. அவனால் வாய்திறந்து பேசவும் முடியவில்லை. முடிவில் அவன் மெல்ல நாக்குழறி மொழிந்தது இதுவேயாம்: "நான் ஸ்ரீவர்த்தனத்தை விட்டுத் திரியம்பகராவின் ஏவல் கேட்டுப் புறப்பட்டு மூன்று நாட்கள் ஆகிவிட்டன. பகைவரின் கண்ணுக்குப் புலப்படாவண்ணம் ராஜமாளிகையின் கோட்டைச் சுவரை விட்டு இறங்கியதும், கடுஞ்சுரம் வந்து என்னைச் சூழ்ந்து கொண்டது. சுரம் காணவே காயம் சோர்ந்து ஒரு மரத்தடியில் படுத்துவிட்டேன். இரண்டுநாள் நினைவற்றுக் கிடந்தேன். இல்லையேல், மறுதினமே இங்கே வந்து சேர்ந்திருப்பேன். திரியம்பகராவ் பேராபத்தில் மாட்டிக்கொண்டிருக்கிறான். ஏனெனில் துருப்புகளோ கொஞ்சம். ஐந்து தினங்களுக்குள் ஆதரவு கிடைக்காது போயின், கோட்டை அழிந்துவிடும். 'நாலாவது தினம் இரவிலே சந்திரன் 11மணிக்கு உதயம் ஆவான். அப்பொழுது நீங்கள் வந்து எதிரியைத் தாக்கவேண்டும். நாங்களும் ஸ்ரீவர்த்தனத்திலிருந்து புறப்பட்டு எதிரியைத் தாக்குவோம். எங்களை எதிர்த்து நிற்கும் பகைஞர் ஓர் ஆயிரவர்.' இது திரியம்பகராவின் வார்த்தை."

அப்பாஜி அதுகேட்டதும், ஒரு வெற்றிலையைக் கீழே எறிந்து, 'ராஜமாளிகையைக் காக்க விரும்புவோர், அவ்வெற்றிலையை எடுத்துக்கொள்ளலாம்' என்றனன். மாவீரர் பலர் ஆங்கிருந்தும், கருமத்தின் அருமை கண்டு அனைவரும் வாளாவிருந்தனர். முடிவில் நேதாஜியே முன்வந்தனன். உடனே அனைவரும் கைகொட்டி ஆனந்தங்கொண்டு, 'நேதாஜியே நிகரற்ற வீரன்' என்று கூறினர். 'ஆபத்துக் காலத்திலே அரிய கருமத்தை ஆற்றல்

காட்டி ஆற்றவல்லோர் அவனையன்றி ஒருவரும் இலர்' என்றும் புகழ்ந்து பேசினர். சுருங்கச் சொல்லின் ஓராயிரம் மாவலருடன் நேதாஜி புறப்பட்டனன். அக்கோட்டையைக் காக்க வேண்டுமாயின், உடனே செல்லல் வேண்டும். கண நேரமும் தாமதஞ்செய்ய வகையில்லை. அன்றைக்கு மறுதினம் சந்திரன் இரவிலே முதல் ஜாமத்தின் முடிவில் உதயம் ஆவான். திரியம்பகராவ் கோரிய வண்ணம் துணைப்படை செல்லவில்லையானல், பகைவர் ஸ்ரீவர்த்தனத்தைக் கைப்பற்றி விடுவர். கைப்பற்றியபின் அதனை மீட்கவேண்டின், பிரம்மப் பிரயத்தனம் செய்ய நேரும்.

நேதாஜி தன் துணைவனான ராமனை அழைத்து உள்ள விவரத்தை விளம்பி, "நாளை இரவுக்குள் ராஜமகியின் கோட்டைக்குள் எங்ஙனமேனும் புக உன்னால் இயலுமோ?" என்றனன். "என்னால் ஆனவரை முயன்று வெற்றி பெறுவேன். நான் ஆயுதபாணியாக அக் கோட்டைக்குள் செல்ல வேண்டுமோ?" என்று ராமன் வினவினன். "இல்லை! ஒரு கயிறுமட்டும் உன்னுடன் கொண்டு சென்றால் போதும்" என்றான் நேதாஜி. "அங்ஙனமாயின் என் வேலை லகுவில் முடியும். ஒவ்வொரு நாளும் கிராம வாசிகள் குதிரைக்குப் புல் விற்கவேண்டி அக் கோட்டைக்குள் செல்கின்றர். நானும் புல் சுமை ஒன்று தாங்கி உள்ளே லகுவில் புகுவேன். கயிற்றை அச்சுமைக்குள் வைத்துவிடின், அதனை ஒருவரும் உணர முடியாது. கயிறு கொண்டு நான் என்ன செய்வது?" என்று ராமன் கேட்டனன்.

"அந் நகரக் கோட்டையில் கிழக்குப் புறம் சுவர் இல்லை. பாறையே சுவர்போன்று உளது. அப்பாறையோ

நேர்ச் செங்குத்தானது. அதன் வழியே கயிற்றைத் தொங்கவிடு. நாங்களோ அதனை எதிர்பார்த்த வண்ணம் கீழே காத்திருப்போம். சந்திரோதயம் ஆகுமுன்னம், அக் கயிற்றின் உதவிகொண்டு அதன்வழியே ஏறி உள்ளே புகவேண்டும்'' என்று நேதாஜி நவின்றனன். “ஒரு சமயம் நான் தவறின், என் செய்வீர்?'' என்று ராமன் வினவ, “வேறு வழிகொண்டு கோட்டைக்குள் புக முயலவேண் டும். உடனே புறப்படுக. அபூஜான் என்னும் அசுவத் தைத் தர யான் தயார். ஆயினும் உனது டில்லிமட்டமே மலைப் பாதையில் நன்கு செல்லக்கூடும்'' என்று உரைத் தான் நேதாஜி.

தட்சணமே ராமன் புறப்பட்டான். நேதாஜி அவனை மீண்டும் விளித்து, “நமது நடமாட்டம் பகைவருக்குத் தெரியக்கூடாது என்பதே என் கவலை. அப்பாஜி வெற் றிலையைக் கீழே எறிந்தபொழுது ஆயிரம்பேர் ஆங்கிருந் தனர். அன்னவரில் இரண்டொருவர் விஜயபுரியின் வேவுகாரராகவும் இருக்கலாம். அவ்வாறாயின், நமது தந்தி ரம் பகைவருக்குப் புலப்பட்டுவிடும். ஆதலின் அத்தகைய துரோகம் நிகழாவண்ணம் காக்கவேண்டியது நம் கடமை. நான் நகரின் கோட்டைவாயில்வரையில் வந்து உன்னை வழியனுப்புவேன்'' என்று கூறிக் கோட்டை வாயிலைக் குறுகினன்.

ஆங்கிருந்த காவலாளன், “ஐயனே! யாரோ இருவர் சற்றுமுன்னே குதிரைமீது விரைந்து சென்றனர்'' என்றான். நேதாஜி திடுக்கிட்டு ராமனை நோக்கி, “நான் கருதியவாறே ஆகிவிட்டது. நமது தந்திரத்தைப் பகை வருக்கு அறிவிக்கவே அவ்விருவரும் பரிமீது விரைந்து சென்றனர். அவ்விருவரும் இன்றிரவு ராஜமகி

போய்ச் சேரலாகுமோ? நீயோ ஒருவன். அவர்களோ இருவர். எனவே உன் நண்பன் கோபாலன் உன்னுடன் சேருவனா? அவன் நம்பிக்கைக்குப் பாத்திரம் ஆனவனா?" என்று நேதாஜி வினவ ராமன், "ஆம்," என்றனன்.

உடனே ராமனும் கோபாலனும் கல்யாண புரத்தின் கீழ்க்கோட்டை வாயில்வழியே அவ்விரு குதிரை வீரரையும் தொடருமாறு கடுகிச் சென்றனர். அவர்கள் சிறிது தூரம் சென்று ஒரு குன்றை வளைந்து செல்கையில், தொலை தூரத்திற்கு அப்பால் துரகத்தின்மீது இருவர் செல்வதைக் கண்டனர். உடனே ராமனும் கோபாலனும் தங்கள் குதிரைகளை நாலுகால் பாய்ச்சலில் நடத்தி நெடுந்தூரஞ் சென்றும், அவர்களை அணுக முடியவில்லை. அந் நிலையில், தங்களுக்குப் பின்னே குதிரை வீரன் ஒருவன் மனோவேகமாக வருவதை ராமன் கண்டனன்.

அவன் நேதாஜியைத் தவிர வேறெவனும் அல்லன். வேவுகாரனே போயிருக்கிறான் என்பதை நேதாஜி உன்னிப் பார்த்ததும், தானும் செல்வதே தகுதி என்று புறப்பட்டனன், தன் குதிரையின்மீது. தனக்குத் துணையாக வரும் ஆயிரம் மாவல வீரரும் அன்று இரவிலே நேரல நகரில் வந்திருக்குமாறு ஆணையிட்ட பின்னரே அவ்வீர மகன் புறப்படலாயினன். அவனது அரபிக் குதிரையோ காற்றும் பின்படப் பறந்து சென்றது. தான் வரும் காரியத்தை இருவருக்கும் உரைப்பதற்காக அவன் மெதுவாகச் சிறிது தூரம் குதிரையை நடத்தி, அவ்விருவருக்கும் தனது கருமத்தை உணர்த்திய பின்னர், மீண்டும் வேகமாகச் சென்றனன்.

வேவுகாரர் இருவரும் தங்களைத் தொடர்ந்து வீரன் ஒருவன் வருவதைக் கண்டு, இனித் தப்ப வழியில்லை

என்று கொண்டு, "முண்டனுக்கு இரண்டு ஆள் என்பர். அங்ஙனமே ஒருகை பார்க்கலாம்'' என்று கருதி நேதாஜியை எதிர்க்க நின்றனர். அன்னவரை நண்ணியதும் நேதாஜி, "நீவிர் யாவர்? எங்கே செல்கின்றீர்?" என்று வினவினான். அதற்கு ஒருவன், "உன்னைத் தொலைப்பதே எங்கள் வேலை" என்று கூறி, நேதாஜியின்மீது பாயத் தொடங்கினன். மற்றவனும் அங்ஙனமே பாய முயலுகையில், நேதாஜி தற்காப்புச் செய்துகொண்டு, பகைவர் நெருங்குவதைப் பாங்காகப் பார்த்து நின்றனன்.

இருவரையும் ஏககாலத்தில் எதிர்ப்பதினும், ஒவ்வொருவராக எதிர்க்கலாமென நேதாஜி கருதி, உடைவாளை உருவலானான். இதற்குள் அம் மனிதனே நேதாஜியை வெட்டித் தள்ள விரும்பி நிற்கையில், நேதாஜியின் வாள் அவனது மண்டையைப் பிளந்துவிட்டது. உடனே உடல் தொப்பென்று தரையில் வீழ்ந்தது. மற்றவனே அது கண்டு முதுகுகாட்டி ஓடத் தலைப்பட்டான். அவனை விடாது நேதாஜி துரத்தவே, பின்னே வந்துகொண்டிருந்த ராமனையும் கோபாலனையும் பார்த்தவுடன் அம்மானிடன் திகைப்புக் கொண்டனன். இதற்கு இடையில் அவ்விருவரும் விடுத்த பாணமோ பரியுடன் பகைவனையும் உயிர் உண்டது. அப்பால் இருவரும் நேதாஜிக்கு வந்தனமளித்துச் சென்றனர். துரோகச் செயலை வீழ்த்தி விட்டதனால், எடுத்த காரியம் இனிது முடியும் என்று நேதாஜி நினைத்து, மாவலரின் வரவு நோக்கி, நேரல நகரம் சேரவே, மாவலரும் பொழுதுபடு முன் அவ்விடம் குறுகினர்.

ராமனும் கோபாலனும் அந்திவேளையில் ராஜ மாளிகை என்னும் கோட்டை சேர்ந்தனர். சேர்ந்ததும்

ராமன் ஆங்கிருந்த தன் நண்பன் ஒருவனைக்கண்டு, வந்த விவரத்தை உரைத்து, ஆலோசனை கேட்டனன். மூவரும் சேர்ந்து மறு தினம் மாலையில் புல் விற்கும் ஏழை யராக அக் கோட்டைக்குள் புகுவதே ஏற்ற உபாயம் என்றான், அந்நண்பன். அங்ஙனமே மறு தினம் அம் மூவரும் புல் சுமையுடன் கோட்டைக்குள் சென்று, புல்லை விற்றுப் பணம் பெற்றுக்கொண்டதும், இரவிலே கோட்டைக்குள் தங்கியிருக்க அனுமதி வேண்டும் என்று தளகர்த்தனைக் கேட்டனர். அவனும் சம்மதி தரவே, மூவரும் ஆங்கிருந்த ஒரு வீட்டில் தங்கலா யினர்.

இரவு பட்டவுடனே மூவரும் செங்குத்தான அப் பாறையின் அருகில் சென்று, கயிறுகளை முடிந்து போட்டு, ஒரு முனையை அயலில் இருந்த பெரிய மரம் ஒன்றில் பிணைத்து, மறு முனையில் ஒரு கல்லைக் கட் டிக் கீழே எறிந்தனர். இதற்கிடையில் நேதாஜி, தனது ஆயிரம் மாவலருடன் ராஜமாளிகை சேர்ந்தனன். மாவலரில் வீரம் படைத்த ஒரு நூறு பேர் நேதாஜி யுடன் செங்குத்தான அப்பாறையை நண்ணினர். எஞ் சியுள்ள மாவலரோ கோட்டையின் கிழக்கு வாசலில் காத்திருந்து, சந்திர உதயம் ஆனதும் கதவை உடைத் துக் கொண்டோ சுவரைத் தாண்டியோ உள்ளே வந்து சேரவேண்டுமென உத்தரவு பெற்றனர்.

இரவு புகுந்தவுடனே, கயிறு தொங்குகிறதா என்று நேதாஜி கூர்ந்து நோக்கினன். தலைக்குமேலே கல் விழும் சத்தம் கேட்டு அவன் களிப்புக் கொண்டு, மீண்டும் நோக்கவே, கயிறு விழுந்துகொண் டிருந் தது. உடனே அதனை எட்டிப் பிடிக்க முயன்றும்

'கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போகும்' என்னும் மொழிக்கு ஏற்ப, பூமியிலிருந்து இருபதடி உயரத்தில் கல் நின்றுவிட்டது. அதனை எட்டிப் பிடிப்பது எங்ஙனம்? பாறையோ செங்குத்தானது. அதில் ஏறவோ வகையில்லை.

அருகேயிருந்த மாவலரில் ஒருவன், "ஐயனே! ஏன் கவலே? இதோ கணப்பொழுதில் கயிற்றைப் பிடித்து விடுகிறேன்" என்று கூறி, மூன்று ஆட்களை ஒருவர்மீது ஒருவராகத் தன் தோளில் ஏறி நிற்கச் சொன்னான். அங்ஙனமே மூவரும் ஏறி நிற்கவே கயிறு கைக்கு எட்டியது.

நேதாஜி அது கண்டு களித்து, சந்திரன் உதயமாகு முன்னம் மாவலரை அதன்வழியே ஏறச் சொன்னான். ஆபத்தான சமயங்களிலும் இடங்களிலும் தானே முன்னுக்கு நிற்பது நேதாஜியின் வழக்கம். அங்ஙனமே முதலில் அவன் ஏற, ஏனையோரும் ஏறி அப்பாறையின் உச்சி சேர்ந்தனர். சந்திரன் தோன்றவே, நேதாஜி தன் மாவலருடன்கூடி உள்ளிருந்த விஜயபுரித் துருப்புகளை எதிர்க்கலானான். வெளியிலிருந்த தொள்ளாயிரம் மாவலரும் அதேகாலத்தில் கோட்டை வாயிலைத் தாக்கத் தொடங்கினர்.

திரியம்பகராவும் சகோரப் பட்சியேபோல் சந்திரோதயத்தை எதிர்நோக்கியிருந்து, தன் வீரருக்கு ஆணை கொடுத்தனன். நெடுநாளாக அடைபட்டுக் கிடந்த மகாராஷ்டிர வீரர் முழுவலியும் கொண்டு முகம்மதியரைத் தாக்கினர். இருபக்கத்திலும் தாக்கப் படவே, முகம்மதியர் திக்குமுக்காடி உயிருக்கு அஞ்சி நாற்றிசையிலும் ஓட நேர்ந்தது. இதற்குள் மாவலரோ

கீழ்க் கோட்டைவாயிலைத் தகர்த்துக்கொண்டு உள்ளே புகுந்தனர். அதுகண்டு விஜயபுரியின் பாசறையில் அபாய முரசு அறையப்பட்டது.

உறங்கிக்கொண் டிருந்தோர் அடித்துச் சுருட்டிக் கொண்டு எழுந்தனர். பலரோ ஏதும் உணராமல் இங்கும் அங்கும் ஓடத் தலைப்பட்டனர். பல சொல்லிப் பயன் என்ன? பகைவர் பலரும் விதியின்றி மகாராஷ்டிர ரிடம் சரண்புகுந்தனர். சிலரோ சரண்புக வெட்கி, வீர சுவர்க்கம் புகுந்தனர். மற்றுஞ் சிலரோ செங்குத்தான பாறையிலிருந்து கீழே விழுந்து ஆவி துறந்தனர். ஸ்ரீவர்த்தனம் என்னும் கோட்டைக்குள்ளே முகம்மதிய ரில் சிலர் ஒளிந்துகொண்டு எதிர்க்கலாயினர். அவர் களை நேர் நின்று தாக்குவது மகாராஷ்டிருக்குக் கஷ்ட மாக இருந்தது. அதில் மாவலர் பலர் காயமடைந்தனர். நேதாஜியும் பாதத்திலே படுகாயமடைந்தனன். கோட் டையின் உள்ளே கிடக்கும் முகம்மதியரைப் பசியால் வாடச்செய்வதன்றி, வேறு வழியில்லை என்று நேதா ஜிக்குப் புலப்பட்டது.

முன்னதாகவே அக் கோட்டையைத் தூளாக்க முகம்மதியர் வைத்திருந்த சுரங்கம் ஒன்று அவ்வேளை வெடிக்காமல் இருந்தது. திரியம்பகராவினால் நேதாஜி இதனை உணர்ந்துகொண்டான். மறு நாள் காலை யில் அதனை வெடிக்கச் செய்ய முகம்மதியர் எண்ணியிருந் தனர். இதற்குள் மகாராஷ்டிரர் அக் கோட்டையை விட்டு, வெளிவந்து விடவே, நேதாஜி அப்பகைவரை நோக்கி, "உயிரிழக்க மனமில்லையாயின், பணிந்து விடுங் கள். இன்றேல், கண்டிப்பாக அனைவரும் வெடியில் சிக் குண்டு ஆவியிழக்க நேரும்" என்று கூறினன்.

முகம்மதியரோ அதற்கு இணங்கவில்லை. உடனே நேதாஜி அச் சுரங்கத்திற்குத் தீமூட்டவே கோட்டையின் சுவர்கள் தூகள் தூகளாகி ஆகாயத்திலே பறந்தன. வெடிச்சத்தம் கேட்டுத் திகில்கொண்ட முகம்மதியர் அஃது இன்னது என்று உணரும் முன்பே, மாவலர் உள்ளே புகுந்து, உயிருடன் இருந்த முகம்மதியரைக் கொன்றும் சிறை செய்தும் வெற்றிமாலை சூடினர்.

# 8

## நேதாஜி சிறைப்படல்

கல்யாண நகரம் கைவசமானதும், ராஜமாளிகை மீண்டதும், தக்காணத்திலே சிவாஜியின் செங்கோல் ஓங்கிப் பரவ ஆதரவாயின. தோரணக் கோட்டையில் கிடைத்த புதையலையும், சாலபுரத்தில் கைவசமான கருந் தனத்தையும் கொண்டு, ராஜகிரி என்னும் கோட்டையை வீர சிவாஜி வலுப்படுத்திக் காவலாளரையும் பரிவீரரை யும் ஏராளமாக அமர்த்தித் தனது படையைப் பெருக் கிக் கொண்டனன். விஜயபுரி அரசோ சிவாஜியின் போர்த் துணிவும் திறனுங் கண்டு, அவனை மடக்க முடி யாமல், அவன் தந்தையாம் ஷாஜியைச் சிறை செய்ய லாயிற்று.

ஆதலினால், அவ்வரசின் பிரதேசங்களை மேலும் கைப்பற்றாமல், சிறிது காலம் வரையில் சிவாஜி வாளா விருந்தனன். எனினும், ஷாஜியைத் துன்புறுத்தவோ கொலைபுரியவோ அவ்வரசு கருதியதை உணர்ந்ததும் அவ்வாலிப வேந்தன் கலங்கி நின்றுவிடவில்லை. மொகலாய சக்கரவர்த்தியுடன் நேசம் காட்டுவதுபோல் நடித்து, தன் தந்தையை விடுவிக்க வழிதேடினன். அங் ஙனமே டில்லிப் பேரரசு தனது சுயநலங்கருதித் தலை யிட்டதால் ஷாஜிக்கு நேர்ந்த ஆபத்து அகலத் தொடங் கிற்று.

இதற்கிடையில், மகாராஷ்டிரப் பெருமக்களிலும் பிரபுக்களிலும் பலர் விஜயபுரி அரசுக்குப் பக்கபலமாக

இருந்துவந்தனர். அன்னவரைத் தன்பக்கம் இழுத்துக் கொள்ள, சிவாஜி பெரு முயற்சி புரியாநின்றனன். அவனுக்கு உட்பட்டிருந்த பிரதேசத்தின் தெற்கே ஜாவளி என்ற சிற்றரசு ஒன்று உண்டு. சந்திராராவ் மௌரி என்பான் அதன் தலைவன். மகாராஷ்டிரப் பெருமக்களிலே அவன் மிக்க வன்மை படைத்தவன். ஆயிரக் கணக்கில் மாவலரைப் படைவீரராகக் கொண்டவன். அச்சிற்றரசோ பரம்பரையாக விஜயபுரியைத் தழுவி நிற்பதாகும்.

ஜாவளி வசப்பட்டுவிடின், விஜயபுரி அரசைச் சிவாஜி சின்னபின்னஞ் செய்தல் வெகு சுலபம். ஆதலின், அம் மௌரியனை எங்ஙனமேனும் தன் வசமாக்கிக் கொள்ள வேண்டும் என்பது சிவாஜியின் பேராவல். அதற்காக வேந்தன் சிவாஜி, நேதாஜியை அழைத்தனன். காசியுடன் மூவாண்டு உவகையுடன் காலங்கழித்த நேதாஜி தன் தலைவனது அழைப்புக் கண்டதும் கடுகளவும் தாமதிக்கவில்லை. காசியும் தன் கணவனை விட்டுப் பிரிய மனமில்லாதவளாயினும், தேச சேவை, அரசன் ஆணை என்று கேட்டதும் அதற்குச் சம்மதித்தனள்.

உடனே நேதாஜி புறப்பட்டுச் சென்று சிவாஜியின் கருத்தை மதித்து, அச்சந்திராராவினிடம் தூது போயினன். 'ஜாவளி அதிபனை வசஞ்செய்தல் வேண்டும் அல்லது அவன் மகளை மகாராஷ்டிர மன்னவனுக்கு மணமுடித்தல் வேண்டும்' என்பதே நேதாஜியின் கருத்தாகும். மௌரியனுக்குச் சம்மானமாகப் பல ஆடை ஆபரணங்களைக் கொண்டு ஜாவளி நகரம் நண்ணினன் நேதாஜி. மௌரியனும் அவனை அன்புடனும் மரியாதையுடனும் வரவேற்றனன். மௌரியனுடன் தனித்துப் பேச

நேதாஜி பன்முறை முயன்று பார்த்தும் சமயம் வாய்க்கவில்லை. ஆனால், மௌரியனே நேதாஜிக்கு உகந்த சுகவாழ்வு அனைத்தினுக்கும் தக்க ஏற்பாடு செய்திருந்தனன். ஜாவளியில் உள்ள பற்பல பெருந் தலங்களுக்கும் காட்சி மிக்க பிரதேசங்களுக்கும் நேதாஜியை மௌரியனது பணியாளர் இட்டுச் சென்றனர்.

நேதாஜியும் அங்ஙனமே இன்பம் பல துய்த்துக் காலங் கழிக்கலானான். இங்ஙனம் ஒரு திங்கள் தீரவே, வன விலங்கின் வேட்டை நேதாஜியை அடிமை கொண்டது. அப் பிரதேசத்திலே குடிமக்களுக்குத் துன்பம் விளைத்துக்கொண்டிருந்த பல வேங்கைப் புலிகளை நேதாஜி வீரத்துடன் மாய்த்துப் பெரும் புகழ் எய்தினன். அவன் ஒரு நாள், மகாபலேசுவர மலைச் சாரலிலே ஒய்யாரமாக உலாவிக்கொண்டிருக்கையில், வேதியன் ஒருவன் விரைந்து ஓடி வந்து, "வீர! உனது அரசனைச் சிறை செய்ய அல்லது கொன்று குவிக்கச் சூழ்ச்சி நடக்கையில், நீ இங்ஙனம் இன்பங்கொண்டு கிடப்பதோ? இன்னுயிர்த் தோழனுக்கு இஃதோ இலக்கணம்?" என்றனன்.

அது கேட்டு நேதாஜி, "இச் செய்தி உனக்கு எங்ஙனம் தெரியும்? தொலைதூரத்தில் இருக்கும் யான் எனது நேசனும் அரசனுமான சிவாஜிக்கு எவ்வாறு துணைபுரிய இயலும்?" என்று கவலையுடன் வினவினன். அச்செய்தி எனக்குத் தெரியவந்த விவரத்தைப் பின்னால் பேசிக்கொள்ளலாம். அரசனுக்கு நேரவிருக்கும் பேராபத்தை முதலில் அகற்ற முயலுவோம். இக்கணமே நாம் இருவரும் வாயு வேகம் கொண்டு, பார்கணவாய் போவோமாக. அங்கேதான் நமது அரசனுக்குப் பேராபத்து நேரும்" என்றனன் அவ் வந்தணாளன்.

உடனே இருவரும் இரண்டு மைல் தூரம் பரியேபோல் பாய்ந்து ஓடினர்.

இருவரும் அக் கணவாய் சேர்ந்ததும், 20 அல்லது 30 குதிரைவீரர் ஒரு நாழிகைக்கு முன்னம் அவ்வழியே விரைந்து சென்றதாக ஆங்கிருந்த வேளாளர் சொல்லினர். நான்கு திசையிலும் சுற்றிப் பார்த்தும், அம்மனிதர் இருக்குமிடம் நேதாஜிக்குப் புலப்படவில்லை. பின்னர் அர்த்தனன், "வீர! அம் மனிதர் இம் மலையின் ஒரு மூலையிலே பதிவாக இருத்தல் வேண்டும். இனி, அன்ப! ஒரு மைலுக்கப்பால் மலையுச்சியிலே சில மனிதர் ஏறுவதைப் பார். அன்னூர் நம் இறைவன் சிவாஜியும் அவன் துணைவருமாக இருத்தல் வேண்டும். நாம் விரைந்து சென்று அவர்களுக்கு எச்சரிக்கை செய்யாமல் போயின் முற்சொல்லிய கூட்டத்தினரால் அவர்கள் திடீரென்று தாக்கப்பட நேரும்" என்றனன். உடனே இருவரும் வெகு வேகமாக அவ்விடம் நோக்கிச் சென்றனர்.

எவ்வளவு விரைந்து சென்றும், அவர்கள் காரியம் கெட்டுப்போயிருக்கும். எனினும், ஈசன் செயலால் ஒரு சம்பவம் நிகழலாயிற்று. சிவாஜியும் அவன் துணைவரும் வந்துகொண் டிருக்கும் காட்டுவழியில், ஒரு வேடப் பெண்ணும் பிள்ளையும் விளையாடிக்கொண் டிருந்தனர். பெண்ணோ தூறக்கே 'ஓடி, சிவாஜி ஏறி வந்த குதிரையின் காலிடையில் அகப்பட்டுக்கொண்டனள். ஆயினும் அதிர்ஷ்டவசமாக அவளுக்குக் காயம் படவில்லை. விழுந்த அதிர்ச்சியினால் அப் பெண் விம்மிவிம்மி அழத் தலைப்பட்டனள். சிவாஜி உடனே தன் பரியைவிட்டு இறங்கி, அப் பெண்ணை வாரி எடுத்து, உடம்பைத் துடைத்து, அவளைத் தேற்ற முயன்றனன்.

அப் பெண்மகளோ ஆறுதல் கொள்ளாமல், மேலும் மேலும் அழத்தொடங்கினள். உடனே சிவாஜி தன் அங்கியிலிருந்த அழகிய பதக்கம் ஒன்றை எடுத்து அவளுக்குக் கொடுத்தனன். அது கண்டு அவள் ஆனந்தம் அடைய, அழுகையும் நின்றது. பின்னரே சிவாஜி அவ்விடம்விட்டுப் புறப்பட்டனன். இங்ஙனம் காலதாமதம் நேராது இருந்திருக்குமாயின், சிவாஜிக்கு ஆபத்து நேர்ந்தே இருக்கும்.

இது நிற்க. நேதாஜியும் வேதியனும் சிவாஜியை நோக்கிச் செல்லுகையில், ஒரு குன்றின் உச்சியிலே மாவலரில் சிலர் அம்பும் ஈட்டியும் கொண்டு, அடர்ந்த புதரில் மறையலாயினர். அம் மாவலருக்கு இடையே மௌரியனது கையாளான சாமராஜன் என்பான் ஆயுதபாணியாக இருந்தனன். அம் மாவலரோ, தாங்கள் ஆற்றவிருக்கும் வினை கருதி, உள்ளமும் உடலமும் துடிக்க, சிவாஜியின் வரவை எதிர்நோக்கியிருந்தனர். இயலுமாயின் அவ் விறைவனைச் சிறைசெய்தல், இன்றேல் அவனை ஆவி கவர்தல், என்பதே அவர்கள் மேற்கொண்டு நின்ற ஆணையாகும். எனினும், தேச விமோசனம் தேடும் தீர புருஷனை, ஈசுவர அம்சம் பொருந்திய அண்ணலை எதிர்ப்பதோ என அம் மாவலரின் உள்ளம் பதைக்கலாயிற்று.

ஒரு சாண் வயிற்றை வளர்க்கக் கருதி, அக் கோரச் செயலுக்கு உடன்பட்டனர்போலும்! அவ்வேளை சாமராஜன், "அதோ வருகிறான் சிவாஜி. அம்மையின் அருள் பெற்ற வீரன் சிரத்தில் துப்பாக்கி ரவை பாயுமா, பாயாதா பார்ப்போம்" என்று தன் மாவலருக்குக் கூறினன். உடனே தன் துப்பாக்கியைத் தூக்கிக் குறி பார்த்து, தான் சுடும்

சமயத்திலே மாவலரும் அம் மன்னவன் மீது அம்பு எய்ய வேண்டுமென்று இயம்பினன். துப்பாக்கிப் பிரயோகத் துக்கு அப் பார்த்திபன் தப்புவனேயாகில் உடனே அவன் மீது பாய்ந்து விழுந்து சிறைசெய்ய வேண்டும்'' என்றும் கட்டளையிட்டான்.

இங்ஙனம் அவன் சொல்லி வாய் மூடுமுன், கூரிய ஈட்டி ஒன்று அச் சாமராஜன் முதுகின் வழியே சென்று, வயிற்றுப் புறம் வெளிப்பட்டது. அவ்வளவில் அவன், 'ஐயகோ' என்று அலறிக்கொண்டு கீழே வீழ்ந் தனன். தலைவன் விழ்ந்தது கண்டதும், மாவலர் மதி மயங்கி மூலைக்கு ஒருவராக ஓட்டம் பிடித்தனர். அம்மை பவானியே ஈட்டிகொண்டு சாமராஜனை வீழ்த்தி விட் டாள் என்பதே அம் மாவலரின் கருத்தாகும். பின்னர் நேதாஜியும் வேதியனும் அக் காட்டைவிட்டு வெளிப்பட்டுச் சிவாஜியைச் சந்தித்தனர். உடனே இருவரும் அவ் வேந்தனை வணங்கி உற்றது முற்றும் உரைத்து ஆறுதல் அடைந்தனர். பின்னரே அப் பூசுரன் அச் சதி யைத் தான் அறிந்த விவரம் முற்றும் அறைந்தனன். அது வருமாறு:

ஜாவளியிலே தேசியக் கட்சி ஒன்று உண்டு. எங்ஙன மேனும் மௌரியனைச் சிவாஜியுடன் நேசமாகப் பிணைத்து விடவேண்டும் என்பது அக் கட்சியின் கருத்து. இது பற்றி அக்கட்சியினர் மௌரியனது மனக்கோளை ஊகித்து அறியத் தொடங்கினர். அன்னவரில் ஒருவனான யான், விஜயபுரி அரசனிடமிருந்து வந்த சாமராஜனது நடமாட் டத்தைக் குறித்து வேவு பார்க்கலானேன். மௌரியனது மாவலரில் ஒருவனுடன் சாமராஜன் அடிக்கடி அந்தரங் கமாகப் பேசுவான். அம் மாவலன் பிரார்த்தனை நிமித்

தம் எனது ஆலயத்துக்கு வந்தனன். வந்ததும், நடந்த விஷயத்தை நவிலுமாறு ஆண்டவன்மீது ஆணையிட்டு அவனைக் கேட்டேன். உடனே அவன் உள்ளதைச் சொல்லி உதவி புரியவும் ஒப்பினன். சிவாஜி இன்றைத் தினம் பார் கணவாய் வழியே வருவான் என்பதை அச் சதிகாரர் அறிந்து, அவ்வழியில் பதுங்கியிருந்து, அவனைச் சிறை செய்யவோ கொலைபுரியவோ கருதியிருந்தனர். அவ்வளவில் யான், நேதாஜியே! உன்னைப் பல இடங்களிலும் தேடி முடிவில் மகாபலேசுவர மலையில் கண்டேன்.

இச் செய்தி கேட்டதும் நேதாஜியையும், வேதியனை யும் சிவாஜி கட்டித் தழுவிக்கொண்டு நன்றி கூறினன்.

பின்னர், "அன்பே! நீ ஏதும் நிகழாததுபோல் ஜாவளிநகரம் சேர்ந்து, மௌரியனது சமுகத்தில் காத்திருக்கவேண்டும். மௌரியன்மீது படைகொண்டு கிளம்ப இது காலம் அன்று. சமயம் வாய்த்ததும், அவனைப் பழிவாங்கத் தாமதியேன்" என்றனன் சிவாஜி. நேதாஜி, "அரசே! அந்த அரசன் முகத்தில் விழிக்கவும் இனி எனக்கு விருப்பம் இல்லை. சதிசெய்தவனை உடனே கொன்று குவியாமல் வாளாவிருக்க என் மனம் எங்ஙனம் இசையும்" என்று இயம்பினன்.

சிவாஜி, "தோழ, அஃது உண்மைதான். அவன் சதியைக் கண்டு நீ மனம் சகியாதிருத்தல் இயற்கையே. வேங்கை ஓர் அறையால் தன் பகைவனை வீழ்த்தும். ஆயினும், சிலந்திபோல் வலைபின்னிப் பகையை மடக்கி அகப்படுத்த அதனுல் ஆகாது. போரில் வீரம் காட்டு வோன் சதியில் சதுரன் ஆகான். சதியைச் சதிகொண்டே சாய்த்தல் வேண்டும். ஆதலின், சின்னுள்

காறும் உன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, மௌரிய னது சபையில் இருப்பாயாக. விரைவில், அம் மௌரியனே யும் சதியால் சாய்க்கக்கூடிய சதுரன் ஒருவனை அனுப்பு வேன்" என்று சொல்லினன். நேதாஜியும் விதியின்றி இணங்க, மூவரும் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவி விடைபெற்றுப் பிரிந்துபோயினர்.

தனது தலைநகரம் சேர்ந்த சிவாஜியோ தான் நேதாஜிக் குக் கொடுத்த வாக்குறுதியை மறக்கவில்லை. கருமத்தில் கண்ணுயிருப்பவன் அதனை மறப்பனே? 'எத் தொழிலைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மன மிருக்கும் மோனத்தே' அல்லவா? சில தினங்கள் சென்ற தும் ராயகிரியிலிருந்து ரகுநாதவல்லாளன் வந்து, ஜாவளியிலே நேதாஜியைக் கண்டு, "வீர! உன் உதவி நம் மன்னன் சிவாஜிக்குத் தேவையாக இருக்கும். இதற்கு இடை யில் நீ உன் வீடு சென்று அங்கே காலம் கழிப்பாயாக" என்றனன்.

உடனே நேதாஜி அபுஜான் என்னும் தனது பரியின் மீது ஏறி வீடு நோக்கிப் புறப்பட்டனன். தன்னுடன் வந்திருந்த துணைவர் இருபத்தைந்து பேரை அந்நகரி லேயே நிறுத்தி வைத்தனன், ரகுநாதனுக்குத் துணையாக. சிவாஜிக்கு வைரியாய், விஜபபுரிக்கு நட்பாளனுப் உள்ள அரசனது நாட்டின்வழியே தனியாகச் செல்லுதல் விவேகம் ஆகுமோ? அம்மை பவானியின் அருளால் சிவாஜி உயிர் தப்பினன் என்ற பேச்சு எங்கும் பறந்தது. உண்மையில் நேதாஜியே தோன்றி உயிர் காத்தனன் என்பதை மௌரியன் உணராமல் இல்லை.

ஆதலின் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என அவன் சமயம் பார்த்திருந்தனன். போதாக் குறைக்கு விஜயபுரி

யிலிருந்து இருசிதியும் பெருந்தூதும் வந்து கொண்டே இருந்தன. ஜாவளி நாட்டின் அதிகாரிகளிலே பலர் காசாசை கொண்டு நேதாஜியின் ஆவியைக் கவர ஆவலுடன் காலம் பார்த்திருந்தனர். நேதாஜி, ஜாவளியை விட்டுப் புறப்பட்டதும், அறுவர் அவனை அறியாமல் அவனைத் தொடர்ந்து சென்றனர்.

பகல் பொழுதிலே நேதாஜி ஒரு மாந்தோப்பில் தங்கித் தன் குதிரைக்குத் தண்ணீர் காட்டியபின்னர், தானும் நீர்குடிக்கத் துணிந்தனன். அவ் வேளையில் அறுவரும் பின்னிருந்து அவன்மீது பாய்ந்து இறுகப் பிடித்துக் கொண்டனர். தனது வலியனைத்தும் கொண்டு அவன் திமிறமுயன்றும் முடியவில்லை. வாளை உருவக் கருதியும் அதற்கு வகையில்லாமல் போயிற்று. சதிகாரரோ அவனைப் பின்கட்டுமுறையாகக் கட்டி, ஒருவரும் அறியாவண்ணம் சதாரா நகருக்கு அழைத்துச் சென்றனர். அந் நகரிலே ஆயிரம் அடி உயமுள்ள ஒரு குன்றின்மீது கட்டப்பட்டிருந்த கோட்டையே அவனது சிறைக்கூடமாயிற்று. விஜயபுரி அரசுக்கு விரோதமாகக் கிளம்பிய கலகக்காரன் என்று அவனைச் சிறையில்போட்டுவைத்தனர்.

௭

# நிலவறையில் தடுமாறல்

பல மாதகாலம் நேதாஜி அச் சிறையில் கிடக்க நேர்ந்தது. வெளி உலக நடவடிக்கை எதையும் அவன் உணர முடியவில்லை. ஒற்றுடுவதில் கைதேர்ந்த சிவாஜியும் தனது உயிர்த் தோழன் நேதாஜியைக் குறித்து யாதொன்றும் உணர முடியாதுபோயிற்று. ஜாவளி நகரை விட்டு நேதாஜி தன்னந்தனியே புறப்பட்டனன் என்பதுமட்டுமே அம் மன்னவனுக்குத் தெரியும். புலம் அறிந்தோரும் விஜயபுரி அரசுக்கு அஞ்சி வாய் மூடி மௌனிகள் ஆயினர்.

நேதாஜிக்குப் பதிலாக ஜாவளி சேர்ந்த ரகுநாதன் சமயம் பார்த்து மோரியனை மாய்க்கவே, சிவாஜி தன் படைவகுப்புடன் தோன்றி அச் சிறுநாட்டைக் கைப்பற்றிக் கொண்டனன். அதன்விளைவாக, மௌரியனது சேனையிலிருந்த இருபதாயிரம் மாவலரும் சிவாஜியின் சேனையில் சேவிக்கலாயினர். பின்னர், அந் நாட்டிலே பார் கணவாயின் அருகில் பிரதாபகிரி என்னும் பெருங்கோட்டை ஒன்றை மகாராஷ்டிர மன்னவன் நிருமித்தனன்.

சோம்பிக் கிடக்க நேர்ந்தது பற்றி நேதாஜியின் மனம் புண்படலாயிற்று. எனினும், அவனது சரீர நிலைமை அவ்வளவாகக் கெடவில்லை. நாள்தோறும் ஒரு முகூர்த்த நேரம் அக்கோட்டையின் மேல்தளத்திலே திறந்த வெளியில் உலாவ அவனுக்கு அநுமதி கிடைத்

தது. தனது அறைக்குள்ளே அவன் தினந்தோறும் காலையிலே தண்டால் முதலிய அப்பியாசம் செய்து உடல்வலியைப் போற்றி வந்தனன். என்றாலும் மனக் கவலை அவனைவிட்டு அகலவில்லை.

மகாராஷ்டிரத்தை மாற்றாரிடமிருந்து மீட்கும் முயற்சியில் பங்கெடுத்துக்கொள்ள இயலவில்லையே என்று அவன் மனம் கரைவான். வலதுகைபோல் இருந்து ஏவின வேலை செய்வதாக வீர சிவாஜிக்குக் கொடுத்த வாக்குறுதி பங்கமுற்றதே என்று கண்ணீர் வடிப்பான். வஞ்சனையாக வைரிகள் சிறைசெய்துவிட நேர்ந்ததன்றோ என்று சிந்தை திரிவான். தினவு கொள் ளும் புயங்களுக்கு வேலை கொடுக்கும் நாள் எந்நாளோ என்று எண்ணி நைவான். என் கருத்தைக் கொள்ளை கொண்ட காசி என் செய்கின்றனளோ என்று துடிப்புக் கொள்வான். கூண்டில் அகப்பட்ட கோளரிபோல் குமுறு வதோ நேதாஜியின் தலைவிதி என்று பதைப்பான். சிறையை விட்டு வெளிக்கிளம்பி, பழிவாங்க வகையில் லையே என்று வாடி வருந்துவான். பெட்டிப் பாம்புபோல் அடங்கிக் கிடக்க உயர் வீரனது உடலும் உள்ளமும் ஒருப் படா அல்லவா? விதி வலியை மாற்ற வழி வேதமுதலாம் எனைத்தாய நூலகத்தும் இல்லை என்று கருதி ஓரளவு ஆறு தல் கொள்வான்.

அக்கோட்டையின் அதிபனோ நேதாஜியிடம் வரம்பு கடந்து பிரியம் காட்டலாயினன். இதற்குப் பெருந் தன்மையோ பேரன்போ காரணம் அன்று. நேதாஜியை வசஞ் செய்து, விஜயபுரி அரசுடன் இணைத்துவிட வேண்டும் என்பதே இவ் வன்பின் அடிப்படையாகும். கோட்டையின் காவலன் அடிக்கடி அச் சிறைக்கூடம்

குறுகி, விஜயபுரி அரசின் அருமை பெருமைகளை நேதாஜிக்கு எடுத்துரைப்பான். அவ்வரசில் சாதிமத வேற்றுமை இன்றி அவரவரின் திறமைக்கு ஏற்றவாறு உயர் பதமும், வெகுமானமும் கிட்டும் என்று சாற்றுவான்.

நேதாஜியோ அவ் வரசின் ரகசியங்களைக் கேட்க ஆவல் கொண்டவனாய், அச் செய்திகளை எல்லாம் கவனத்துடன் கேட்டு வந்தனன். கோட்டைத் தலைவனோ பேச்சில் சதுரனாதலின், அவனுடன் உரையாடுதல் நேதாஜிக்கு ஓரளவு இன்பம் தரலாயிற்று.

ஒரு தினம் அக் கோட்டைத் தலைவன் தனது கருத்து இன்னதென நேதாஜிக்குக் குறிப்பாக உணர்த்தினன். அதனை நன்குணர்ந்தும், உணராதவன்போல் நடித்தான் நேதாஜி. பின்னர் அத் தலைவன் உள்ள விஷயத்தை விண்டு விளம்பவே, நேதாஜி, "ஐய! சிவாஜி வேந்தனது படைவீரரின் பான்மையை நீ அறியாய் போலும்! அன்னார் தம் தேசப்பகைவனை வெல்லப் பார்ப்பர். இன்றேல் வீர சுவர்க்கம் புக முயலுவர். தேசத் துரோகத்தையும் ராஜத் துரோகத்தையும் அன்னவர் கனவிலும் கருதார். தேச விரோதிகளிடம் சேர்ந்து களிப்பதினும், கடு நரகம் புகுதல், அல்லது அவர் கையால் சித்திரவதைக்கு ஆளாதல் சிறப்பாகும்" என்று பதில் கொடுத்தனன்.

அவ்வுரை கேட்டதும், கோட்டைத் தலைவனுக்குத் திகைப்பு உண்டாயிற்று. கரைத்தால் கல்லும் கரையும் என்பது பழமொழி. அங்ஙனமே மீண்டும் இருமுறை பேதிக்கப் பார்த்தான். நேதாஜி அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கவில்லை.

அதுகண்ட காவலன் முகம் சுளித்து, "வீர! 'பகைவரின் பக்கம் சேரேன்' என்று பேசுதல் சுலபந்தான். 'உயிர் போயினும் அக்கறையில்லை' என்று இசைப்பதும் லகுவே. எனினும், அங்ஙனமே முடிவுவரையில் மன உறுதி கொண்டிருத்தல் முடியாத காரியம். போர்முனைகளிலே உயிரைப் பொருட்படுத்தாது நீ வீரம் விளைத்துளாய். இது மெய்யே எனினும், சிறைக்கூடத்தில் கிடந்து, சித்திரவதைபோல் சிறிதுசிறிதாக ஆவியை இழத்தல் ஆகாத காரியம். திக்கின்றிக் கிடக்கும் நீ என்ன செய்ய இயலும்? இன்றளவும் உன்னிடம் உள்ளன்பு கொண்டு, நலம் பல புகன்று உரையாடி வந்தேன். நீயோ அதனை உதறித் தள்ளிவிட்டாய். இனி எனது சினவெழுச்சியை நீ ருசிபார்க்க நேரும். வேறு யான் சொல்லக் கிடப்பது யாதுளது?" என்று கூறி அக்கணமே நேதாஜியை விட்டு அகன்றனன்.

அச் சொல்லின் விளைவு மறுதினமே நேதாஜிக்குக் கண்கூடாயிற்று. அடுத்த தினம் கோட்டைக் காவலன் அறுவருடன் வந்து, நேதாஜியை ஓர் இருட்டறைக்கு இட்டுச் சென்றனன். அஃதோ அந்தகாரம் நிரம்பிய நிலவறை ஆகும். மேல்தளத்தின்மூலம் அதற்கு ஒரு சிறு வழியே உண்டு. அதுவேவாயிலும் சாளரமும் ஆகும். அதன் வழியே அறுவரும் நேதாஜியை உள்ளே தள்ளினர். வாலிபமும் உடல்வலியும் கூடி நின்றதனால் காலும் கையும் முறியாமல் நேதாஜி தப்பினன்.

உடனே கொத்தர் இருவர் அவ்வறையின் வாயிலை இரும்புக் கம்பி கொண்டு அடைக்க முயன்றனர். அது ஒன்பது அங்கணம் கொண்டது. ஒவ்வோர் அங்கணமும் ஓரடிச் சதுரமாகும். அங்ஙனம் கொத்தர் அடைக்க

முயலுகையில், தலைவனே உரத்த குரலில், "வீர மகனே! எங்களது பெருவேந்தன் பெருந்தன்மையுடன் சொல்லும் யோசனைக்கு நீ காதுகொடுக்கவில்லை. ஆதலின், உன்னை இந்த நிலவறையில் தள்ளியுள்ளோம். இதில் நீ ஒன்பது நாளே உயிருடன் இருக்க இயலும். ஒன்பது அங்கணங்களும் நாளுக்கு ஒன்றாக அடைக்கப்பட்டுப் போம். பின்னர் இந்த இருட்டறையில் உனது உடலம் உயிரின்றி நாறிக்கிடக்கும். இஃது என் வார்த்தை அன்று. தலைக்கு மேல் உள்ள ஆபத்தை எண்ணிப் பார். வீணே உயிரைப் பறிகொடுப்பதில் யாது பயன்?" என்று கூறிச் சென்றனன்.

இந்த அச்ச மொழி காதில் பட்டும் நேதாஜி நடுங்கவில்லை. ஒன்றும் பேசாமல், உன்மத்தனேபோல், உறுதி தளராமல் இருந்தனன். 'எல்லாம் ஈசன் எழுதினபடியே நடக்கும்' என்பதே அவன் கொண்ட துணிவாம். போர்முனையில் எதிரியைத் துவைத்துத் தன் உயிரைத் திரணமாகப் பாவிக்கையில் இருந்த மனவலி இச் சமயமும் அவனைவிட்டுச் சிறிதும் அகலவில்லை. 'எனது தாயகம் விடுதலை பெற யான் எனது உயிரை வழங்கவேண்டும் என்று ஈசன் என் தலையில் எழுதியிருப்பின், அச் சாவு எனக்கு இப்பொழுது வந்தால் என்ன? அப்பால் வந்தால் என்ன? எவ் வடிவில் வந்தால்தான் என்ன? இப்பொழுதோ மகாராஷ்டிரத்தை மீட்க, ஆயிரக்கணக்கான வீரர் வாளுருவி நிற்கின்றனர். அன்னவரில் ஒருவனாகிய யான் உயிரிழப்பின் ஒரு மோசமும் விளையாது' என்று தனக்குள்ளே நேதாஜி கருதி, ஆறுதல் கொண்டனன்.

எனினும் அவ் வீரனுக்கு ஒரொரு சமயத்திலே தேவி காசியின் நினைவு தோன்றிவிடும். உடனே அவன்

சிறிது கலங்குவான். பின்னர், 'இப்பேதை புலம்புவ தேன்? போர் வீரனது மனையாள் எக்கணத்திலும் தன் கணவனை இழக்க நேரும் என்பது இயற்கை அல்லவா?' எனத் தேறுதல் கொள்வான்.

அடுத்த தினம் காலையிலே ஓர் அங்கணத்தை அடைக்க ஆட்கள் வந்துவிட்டனர். தலைவனும் இருவரு டன் வந்து நின்றனன். உடனே அன்றைக்கு வேண்டிய அன்ன பானாதிகள் நேதாஜிக்கு அச் சந்தின் வழியே நீட்டப்பட்டன. தேசத் துரோகியாகி, விஜயபுரிக்குத் துணை புரியுமாறு அத் தலைவன் மீண்டும் உரைத்தனன். அப்போதும் நேதாஜி அதற்குச் செவி சாய்க்கவில்லை. உடனே ஓர் அங்கணம் மூடப்பட்டது. மற்றைத் தினங்களிலும் கோட்டைக்காவலன் அந்த இருட்டறை நண்ணி நேதாஜியை நோக்கி, 'ஆன்ம நலம் விடுத்து, உடல் நலம்தேடுக' என்று உரைப்பான். விஜயபுரியை வேரறக்க விரதம் பூண்டுள்ள வீரன் ஒருவன் சரணம் புக மனம் ஒப்பு வனோ? ஒரு நாளும் ஒவ்வான் அல்லவா? நேதாஜியின் மனவலி கண்டு, அத் தலைவன் வாயிழந்து வாட்டத்துடன் திரும்பினன். இங்ஙனமே ஐந்து தினங்கள் கழிந்தன. ஐந்து அங்கணங்களும் ஒன்றன்பின் ஒன்றாக மூடப் பட்டன.

# 10

## மாதின் மனக்கசிவு

ஒரு நாள் மாலை நேரத்திலே உயர்குலமாது ஒருத்தி சதாரா மலைக்கோட்டையின் உச்சியிலே உல்லாசமாக உலாவிக்கொண் டிருந்தனள். மந்தமாருதம் வெகு அந்தமாக வீசிக்கொண் டிருந்தது. நாற்றிசையிலும் தோன்றிய இயற்கை வனப்புக்களை அப் பெண்பாலின் இருவிழிகளும் பருகிக் களித்தன. தாதி ஒருத்தி அம் மாதின் அருகே இருந்து ஏவும் வேலை செய்ய விருப்புடன் காத்திருந்தனள்.

பாலர் இருவர் பரிந்து ஓடிவந்து அப்பெண்பாலின் கால்களைக் கட்டிக்கொண்டு, "அன்னாய்! எங்கள் தந்தை இடைவழியில் தங்கிவிட்டது ஏன்? அவர் என்று வருவார், இக்கோட்டையின் காவலை மேற்கொள்ள?" என்று ஆவலுடன் கேட்டனர். "மக்காள்! அரசாங்க அலுவலின் நிமித்தம் அவர் வழியிலே தங்க நேர்ந்தது. ஒரு வாரத்தில் இவண் வந்து சேர்வார்" என்று அவள் சொல்லினள்.

இதற்கிடையில் விசித்திரமான சாளரம் ஒன்று அக் குல மாதின் கண்ணிற்குப் புலப்பட்டது. அச் சன்னல் பாதியளவு செங்கல்லால் மூடப்பட்டிருந்தது கண்டு, "தாதி, ஈதென்ன? இத்தகைய சாளரம் நமது மாளிகையின் அருகே இருக்கக் காரணம் யாது?" என்று வினவினள்.

தாதி: அன்னாய் அஃது ஒரு சிறைக் கூடு.

மாது: அக் கூண்டினுள்ளே சிறைப்பட்டுக் கிடப்பது யார்?

தாதி: வீரசிங்கம் ஒன்று கட்டுண்டு கிடக்கிறது.

மாது: வீரசிங்கம் எனில் மானிடரா, விலங்கா?

தாதி: மகாராஷ்டிரத்தின் மகிமைச் சிங்கம்.

மாது: நம் தாய்ப் பூமியில் சிங்கமும் உளதோ?

தாதி: ஆடவரில் ஆண்மை மிகப் படைத்தோரை வீர சிங்கம் என விளம்புவர். இது தாங்கள் அறியாததன்றே.

மாது: (திடுக்கிட்டு) நம் தேச வீரசிங்கம் ஒருவனு சிறையில் கிடந்து வாடுபவன்? அவன் செய்த குற்றம் யாது?

தாதி: தாயே, தாய்நாட்டின்மீது பேரன்பு கொண் டதே அப்பெருமான் இழைத்த பிழையாகும்.

மாது: தேசாபிமானத்தின் பலன் சிறைக்கூடந் தானே?

தாதி: அந்நியர் ஆதிக்கம் வகிக்கையில் தேச பக்தி என்பது மாபெருங் குற்றமாம்.

மாது: (கவலையுடன்) அவ்வீரன் யாவன்?

தாதி: சிவாஜியின் உயிர்த்தோழருள் ஒருவன்.

மாது: ஆ! நமது மகாராஷ்டிரத்தை மகிமைப் படுத்த முனைந்து நிற்கும் மன்னவன் தோழனு சிறையில் கிடக் கின்றான்? அவன் செய்த குற்றந்தான் என்ன?

தாதி: விஜயபுரி அரசை எங்கும் வாட்டி, நாட்டின் அமைதியை நிலைகுலைத்து, வீரம் விளைத்ததேயாம்!

மாது: (சிறிது நேரம் திகைத்து நின்று) அவ்வீரன் பெயர் யாது? வேண்டும் அளவு காற்றும் புக வகையில்லையே அவ்வறையில்.

தாதி: (கண்களில் நீர் ததும்ப) தாயே! எனது உள்ளம் பதைக்கின்றது. இன்னும் நான்கு தினங்களில் அச் சிறிய துவாரங்களும் மூடப்பட்டுப் போம்.

மாது: அங்ஙனமாயின் அவன் கதி அதோகதி தானே?

தாதி: அம்மை பவானியின் அருள் இல்லையேல், அவ் வீரபுருஷன் இருட்டறையில் ஆவி துறக்கவே நேரும்.

அது கேட்டதும் அம்மாது உடல் நடுங்க, உள்ளம் சோர, ஓ என்று அலறிக்கொண்டு, தனது மாளிகை புகுந்து, மஞ்சத்தில் சாய்ந்தனள். இரவு முழுதும் அவளது கண் இமைகள் ஒன்றோடொன்று சேரவில்லை. அம் மாதராள் ஊணும் கொள்ளவில்லை.

'அன்னியரின் தலையெடுப்பில் நாட்டின் நன்மக்கள் சுதந்திரதாகங் கொள்ளுதல் குற்றமெனவே கொள்ளப்படு கின்றது. அதனைக் குறித்து வருந்திப் பயனில்லை. ஆயினும் அத்தகைய வீரருக்கு இத்தகைய சித்திரவதை விதித்தல் அடுக்குமோ? வாள் கொண்டு கணப்பொழுதில் சிரத்தைக் கொய்யலாம்; அன்றேல் பீரங்கியின் வாயில் வைத்துச் சுட்டுவிடலாம். உயிருக்கு அதி அவசியமான காற்றும் புகமுடியாவண்ணம் இருட்டறையில் அடைத் துப் போடுதல் பாவம், பாவம்!' என்று பலவாறு கருதிச் சிந்தை மிக நொந்து மெய்தளர்ந்து பஞ்சணையில் விழுந்து புரண்டாள் அம்மாது.

மறுதினம், அருணோதயத்தில் அம்மங்கை நல்லாள், 'பொழுது புலர்ந்ததெனப் பறவைகளும், விலங்குகளும் பூரிப்புக் கொள்ளுகின்றன. நிலவறையில் கிடக்கும் அவ்வீரனது மனம் என்ன பாடு படுமோ? ஈசனே அறிவான்! ஆடவரினும் பெண்டிருக்குக் கருணை மிகக்

கொடுத்த பரமனைக் குறித்தே வருந்தல் வேண்டும். அவ் வீரனை விடுவிக்க வகை காணுது துடிக்கும் எனக்குப் பெருமதியும் உயர்ந்த வரமும் அப் பெருமான் அளித் திருக்கக் கூடாதோ?' என்று எண்ணி, மஞ்சத்தில் இருப்புக் கொள்ளாமல் அவ்வறையை நோக்கிப் போகத் தீர்மானித்தனள்.

அச் சமயம் கொத்தர் இருவர் அவ்விடம் குறுகி இருட்டறையின் ஆறும் அங்கணத்தையும் அடைக்க முயலாநின்றனர். 'பாழும் வயிற்றை வளர்க்கவேண்டி, கொடும் பாதகச் செயலுக்கு உடந்தையாக நின்று, அச் சாளரத்தை மூடும் மனிதரது கல்மனம் கண்டு கரைவனே?' என்று அவள் கண்ணீர் வடிப்பாள். 'மூன்று தினங்களில் அம் மொய்ம்பனது ஆருயிர் அகன்றுவிடுமே; அவனைத் தப்புவிக்க வகை ஒன்றும் கண்டிலேனே' என்று நினைந்து வாடுவாள். மகாராஷ்டிர வமிசத்தில் உதித்து, விதியின்றி முகம்மதியனை மணக்க நேர்ந்த தனது வாழ்க்கை நிலையை உன்னி உன்னி உள்ளம் உடைவாள்.

இங்ஙனம், அப் பெண்பால் எண்ணுத எண்ணமெல் லாம் எண்ணி, நெஞ்சம் புண்ணுகி நிற்கையில், கொத்தர் இருவரும் சரேலென்று எழுந்து, 'நாளைமுதல் கோட்டை யின் தலைமைவகிக்கும் அதிபன் தேவி இவள்' என்று கருதி ஆங்கிருந்தவண்ணமே அம்மாதுக்கு அஞ்சலி செய்தனர். பின்னர், குறிப்பில் குறிப்பறியும் தாதியின் சைகையை மதித்து இரு கொத்தரும் அச் சீமாட்டியின் அருகில் வந்து வாய்புதைத்து நின்றனர்.

மாது: என்னே உங்கள் நெஞ்சின் நிலை! நீங்களும் ஹிந்துக்கள்; அவ் விருட்டறையில் கிடக்கும் வீரனும் ஹிந்து ஆவான். உயிர் இருக்கும்பொழுதே அவனுக்குக்

கல்லறை சமைக்க உங்கள் மனம் எங்ஙனம் துணிந்தது? உங்கள் தேசத்தையும், தேவனையும் காக்கக் கருதிய அவ் வீரன் சமர் புரிந்து சிறை புக நேர்ந்தது. இதனை நீங்கள் உணரவில்லைபோலும். போதாக்குறைக்கு உல்லாசமாகப் பாடி நிற்கவும் உங்கள் மனம் துணிவுகொண்டது அதிசயம்! அதிசயம்!!

கோத்தர்: தாயே! எச் சமயமும் பாடி நிற்றல் எம் பிறவிக் குணம். வேலை நேரத்தில் பாடல் பாடின் சிரமமின்றி வேலை இனிது நிறைவேறும். அன்னுப்! உதரநிமித்தம் நாங்கள் செய்யும் வினையின் விளைவை அறியாதவர்கள் அல்லோம். விதியின்றியே வினை ஆற்றுகின்றோம். அம்மை பவானியே! உயிருடன் ஒருவனைக் கொல்லும் வினையா யாங்கள் புரிவது? 'நீ கடைக் கணிப்பின், இவ் வீரனைப் பிழைப்பித்தல் எம்மாத்திரம்' என்று அந்த அம்மையைத் துதித்துப் பாடினோமே அன்றி உல்லாசமாக எதுவும் பாடவில்லை.

மாது: அம்மையைத் துதிப்பதுடன் உங்கள் குலாபிமானம் நின்றுவிடுமோ? அவ் வீரபுருஷனை விடுவிக்க உபாயம் ஒன்றும் செய்திலிரோ ?

கோத்தர்: செய்யாமல் இல்லை. அச்சாளரத்திலே சூஸ்திரம் ஒன்று பொருத்தியுள்ளோம். வகையுணர்ந்து அதனைக் கையாளின் சாளரம் அப்படியே எடுபட்டுப் போம்.

மாது: (சற்றே ஆறுதல் அடைந்து) மகாராஷ்டிரம் வாழ்க! கட்டுண்டு கிடக்கும் அக் காளையும் வாழ்க! உங்களது உபாயத்தை அவ் வுயர்புருஷனுக்கு உணர்த்தல் எங்ஙனம்?

கோத்தர்: படைத்தவன் பாதுகாப்பான் அல்லவா? அங்ஙனமே உபாயம் அமைத்தோன் அதனை உணர்த்தாது

போவனோ? இன்றோ நாளையோ எங்கள் பாடலின் இடையே அவ் வீரனுக்கு உபாயத்தை உணர்த்த எண்ணி யுள்ளோம். இருட்டறையினின்று வெளிவரும் வகையை நாங்கள் அமைத்துள்ளோம். பின்னர் அவ் வீரனைக் காத்து இக் கோட்டையை விட்டு வெளியேறச் செய்தல் அன்னாய், ஆண்டவன் பொறுப்பு.

அன்று மாலை கொத்தர் இருவரும் தமது கருமத்தில் கண்ணாயிருந்தனர். சாளர அடைப்பு வேலை நன்கு நடை பெறுவதைக் கண்காணிக்கக் கருதி, முகம்மதிய அதிகாரி ஒருவன், ஆங்கு வரலாயினன். கொத்தர் இருவரும் வழக் கம்போல் தமது சுய பாஷையில் பாடிக்கொண்டே வேலை செய்தனர்.

அது சமயம் அன்னாரில் ஒருவன், "வீர! அஞ்சேல்! ஆண்டவன் அருளால் விடுதலை பெற வழியுளது: சாள ரத்தைச் செந்தூக்காய் நகர்த்தக் கூடிய விசை கீழ்த் திசையில் உளது. அவ்விசையை அழுத்தின் சாளரம் தானே திறந்துகொள்ளும். இன்றிரவு நடுநிசியில் நானும் ஒரு தாதியும் இங்கே வருவோம். ஆதலின், நடு நிசியில் விசையை அழுத்தி, ஜன்னலைத் திறந்து வெளிக் கிளம்பலாம்'' என்று பாடலின் மூலமே பேசினன்.

அருகேயிருந்த முகம்மதியனோ, வழக்கம்போல் கொத்தன் பாடுகிறான் என்று எண்ணினனேயன்றி, இம்மியளவும் சமுசயம் கொள்ளவில்லை. கொத்தன் கூறிய பாடலின் உட்கருத்தை நேதாஜி நன்கு கண்டுகொண்ட னன். ஆயினும் உடனே அதனைப் பரீட்சை பார்க்க, அவன் விரும்பவில்லை. எனினும் அவ் வறைக்குள்ளே இங்கும் அங்கும் நடப்பதுபோல் நடித்து, விசை இருக்கும் இடத்தைக் கூர்ந்து நோக்கினன்.

அன்று ஆண்டவன் செயலால் அந்தி மாலை விரைவில் வந்து அணுகியது. ஏனெனில், பிற்பகல் முதல் வான வீதியிலே கருமேகங்கள் கூடிக் குவிந்து எங்கும் இருளைப் பரப்பலாயின. அது கண்ட கொத்தர், தமது இருப்பிடம் ஏகினர். முகம்மதியனும் தனது இல்லம் சென்றான்.

இரவு வந்து சூழ்ந்ததும், நேதாஜி அவ் விசையைக் கையாண்டனன். உடனே சாளரம் தனது இருப்பிடம் விட்டுப் பெயரலாயிற்று. அது கண்ட வீரன், கொத்தனது வாக்கு மெய் எனவே கொண்டு நடுநிசியின் வரவை ஆவலுடன் எதிர்நோக்கிக்கொண் டிருந்தனன். அந்நிலையில், அவனுக்குக் கணநேரமும் ஒரு யுகப்பொழுதாக இருந்தது. புழுக்கம் அதிகமாயிற்று. உடலெங்கும் வேர்வை துளித்தது. பின்பு புயல் காற்றும், இடிமுழக்கமும் கிளம்பின. முடிவிலே, நள்ளிரவு குறுகியது எனக் கூறுவதுபோல் மணியோசை கேட்டது.

11

## வாஞ்சை விஞ்சுதல்

நேதாஜீ அங்ஙனம் இருக்க, இரவு புகுவதை அந் நங்கையும் எதிர்நோக்கியிருந்தாள். விரலிட்டு விநாடிகளைக் கணக்கிட்டுக்கொண்டுமே இருந்தாள். சொந்த மரபைச்சேர்ந்தசீரிய புருஷசிம்மம் ஒன்றைச் சிறைமீட்கும் ஆவல்! அந்த ஆவல் வளர வளர, வானத்தை நோக்கினள் அவ் வனிதை.

ஆண்டவன் செயல்போலும்! அன்று பின் மாலையிலே, வானவீதியில் மேகங்கள் குவியா நின்றன. கதிரவனும் மஞ்சுக்கூட்டத்தினூடே மறையலானான். வெண்ணிற மேகங்கள் எல்லாம் கருமை கொண்டன. பூமியிலே ஒளி மங்கியது. இருள் வந்து சூழ்ந்து கொண்டது. கதிரவன் மலைவாயில் வீழாவிடினும் என்ன? எந்தம் இரவுபோன்ற காரிருள். கடும்புயலும் கூடிக் கொண்டது. மின்னலும் தோன்றியது.

அதுகண்டாள் அக் காரிகை. 'அந்தோ! பெண்பாலின் பிரலாபங்கண்டு, யாவரே இரங்காதார்! எனது மனம் சஞ்சலம் கொள்வது கண்டு, பஞ்ச பூதங்களும் சலிக்கின்றன!' என்று எண்ணினள். அப்பால், 'பஞ்ச பூதங்கள் சலிப்பதில் மற்றோர் உண்மையும் உண்டு. உயர்வீரனைக் காத்தல் நமது கடமைதான். என்றாலும் நானோ பெண்பால். அவனோ ஆண்பிள்ளை; வேற்று மனிதன். நள்ளிரவில் அவனை எங்ஙனம் சென்று காண்பது? பிறர் அறியின், வீணே பழியும் பாவமும் வந்து சம்பவிக்குமே?

நமது தாதியும் யாது நினைப்பாள்? முன்பின் அறியாத ஒருவனை நடுநிசியிலே காணச் செல்லும் இவளிடம் மங்கையர்க்குரிய நாற்குணமும் நற்குணமும் இல்லையே என்று சிலர் எண்ணக் கூடும் அன்றோ?' என்று சிந்தாகுலம் கொண்டாள்.

"இனி எனக்கு நேரும் அலர்மொழியை அறிவிக்கவே, இப் பூதங்கள் சலிக்கின்றன. இம்மட்டோ? சகுனத்தடைபோல் காற்றும் மழையும் குறுக்கிடுகின்றனவே' என்று குமுறினாள். அன்றியும், "மாதர்க்குரிய நாணம் இவளிடம் இல்லை; இதோ பாருங்கள் போகின்றாள்' என்று காட்டவே மின்னல் தோன்றுகிறது" என்று மயங்குவாள். 'மடமாது தானே; போகலாம் என்று நாம் போனாலும் நாணம் என்பது தோன்றி, முன்னே நின்று தடை செய்கிறதே!' என்று தேம்பினாள்.

'கொத்தனிடம் கூறியவண்ணம் குறித்த நேரத்தில் சாளரவாயில் சேரவேண்டும். சேராவிடின் அவ் வீரன் மனம் உடைவான். பசியாளனுக்கு ஆகாரத்தைக் காட்டி மறைத்தல் கொடும் பாவமாம். அங்ஙனமே, விடுதலை தேடித் தருவதாக விளம்பி, அதற்குரிய வகை துறை தேடாது, இவன் இருந்து ஏங்கிக் கிடத்தல் இன்னும் மிகப் பாவம் அன்றோ?' என்று கருத்தழிந்தாள்; பாவம்!

நிலவறையில் கிடக்கும் வீரனது நிலைமை யாது? கொத்தன் கூறிப்போனவண்ணம், விசையை அழுத்திப் பார்க்க அவனுக்கு ஆவல் அதிகம். சிறையிலிருந்து வெளியேற வேண்டும் என்பதா நோக்கம்? அன்று. வெளியேறின் வேந்தனுக்கு ஊழியம் புரியலாம்; தேசத் தொண்டும் செய்யலாம்; பகை அரசனைப் பழியும் வாங்கலாம்; மீண்டும் பராக்கிரமம் காட்டலாம், என்பதேயாம்.

வெளிச்சம் இருக்கையில் விசையைப் பரீட்சை பார்க்க அவன் விரும்பவில்லை. யாரேனும் கண்டுவிடின், கருதிய கருமம் கைகூடாது. ஆதலின், இருள் சூழும்வரையில் அவன் காத்திருந்தான். மேகமூட்டத்தினால் இருளும் விரைவில் வந்து புகுந்தது. மழையும் கூடிக்கொண்டதல்லவா? விசையைத் தொட்டான். உடனே அம் மாயச் சாளரம் திறந்துகொண்டது. கோத்தனது உரையிலும் நம்பிக்கை மிகுந்தது. அம்மை பவானியைத் தொழுது, விசையைத் திருப்பி, அவ்வறையினூடே கிடந்தான். பாதி ராத்திரிவேளை புகுவதையும் பார்த்த வண்ணமாக இருந்தான்.

'அணில் கொம்பிலும், ஆமை கிணற்றிலும்' என்பது போல், அம்மாதும் மானிடனும் பேதுற்றக் கிடந்தனர். நாழிகை பறப்பதை ஆத்திரக்காரன் அறியான். நாழிகை பறக்கவில்லை என்றே எண்ணுவான். அவ்வாறே இருவரும் இருக்க, மெதுவாக இரவும் புகுந்தது; நடுநிசியும் மூண்டது. பேயும் உறங்கும் வேளை என்று அறிவிக்க அந் நகரிலே முரசொலியும் கிளம்பியது. உடனே அம் மாதரசி பரபரப்புடன் எழுந்தாள். எழுந்தும், கால்கள் முன்னோக்கவில்லை. மனம் மட்டும் பாய்ந்து பறந்தது.

முடிவில், 'வருவது வருக' என்று ஒருவாறு துணிந்தாள் அவள்; மாளிகையின் மேல்தளத்திலே நடந்தாள். காரிருள் ஒருபக்கம்; கனத்த மழைக்கோப்பு ஒருபக்கம். கால்கள் கூசின; கைகள் நடுங்கின; உடலம் நடுங்கியது. தள்ளாடித் தள்ளாடி நிலவறையை நோக்கி நடந்தாள். வழிகாட்டுவான்போல், கோத்தன் முன்னே செல்ல, ஒப்பற்ற தாதி கைலாகு கொடுத்துவர, நிலவறை சேர்ந்தாள் மாது!

மூவரும் மாயச் சாளரத்தை அணுகினர். மனிதரின் காலடிச்சத்தம் கேட்டதும், மழைத்துளியை நோக்கி நிற்கும் சகோரப் பட்சியேபோல் இருந்த வீரன் விசையை அழுத்தினன். சாளரம் படீரெனத் திறந்தது. கட்டமைந்த சரீரத்தைக் கொள்ளும் அளவினதாக இல்லை அச்சாளர வாயில். ஆதலின், உடலைச் சுருக்கிக் கொண்டு வெளியே நீண்டான் அவ்வீரன், அனுமனைப்போல்! இருளை இருள் விழுங்கும் அந் நடுநிசியில் எதுவும் புலப்படவில்லை அவனுக்கு. தன்னை விடுவிக்க வந்திருப்போரையும் காண இயலவில்லை.

அம்மாதும் கருணைக்குப் பாத்திரமான வீரன் யாவன் என நோக்கி உணரக் கூடவில்லை. ஏனைய இருவருக்கும் அப்படியேதான். கணநேரம் அந்நால்வர் மனமும் துடிதுடித்தன. அத் துடிப்பை அகற்றுவான்போல், வான வெளியிலே பளிச் என்று மின்னல் ஒன்று வெட்டியது. தனக்கு எதிரே ஓர் ஆடவனும் இரு பெண்டிரும் இருக்கக் கண்டான் நேதாஜி.

உடனே அக் குலமாது, "நேதையா! நேதாஜி! என் அண்ணா? என்னே விதியின் செயல்!" என்று கூறி, அடியற்ற மரம்போல் அவன்மீது சாய்ந்தாள். "ஐயகோ!" என்று அலறினள். "உன்னை உயிருடன் கண்டேனே. எல்லாம் அம்மையின் இன்னருள்" என்று துதித்தாள். "உன்னை இந் நிலையிலா காண்பது? என்ன பாவம் பண்ணினேன்" என்று பிரலாபித்தாள். "அன்று பாரிலே பட்டுக்கிடந்தனை. மாண்டுவிட்டாய் என்றே மறுகிச் சென்றேன்; ஏகலிங்கமூர்த்தியின் கருணையே கருணை!" என்று கதறினள்.

"கங்கா! கங்கா! தங்காய்!" என்று தேம்பினன் நேதாஜி! நீ இறந்துபட்டாய் என்றல்லவோ எண்ணியிருந்

தோம்'' என்று விம்மினன். அவளை வாரி எடுத்தான்; அணைத்துக் கொண்டான். அவளோ நினைவு தப்பியவளாய் நேதையாவின்மீது சாய்ந்தனள். தாதியும் கொத்தனும் அவர் நிலை கண்டு உன்மத்தம் கொண்டவர் போல் பேசாது நின்றனர்.

ஈது இங்ஙனமாகச் சதாரா கோட்டையின் காவலனாக நியமனம் பெற்றவனே முன்னதாகத் தன் மனைவியையும் மக்கள் இருவரையும் அனுப்பியிருந்தான். தான்மட்டும் பரிவாரங்களுடன் பின்னே வரலானான். மாலையிலே வான வீதியில் மேகம் குவிந்ததும், தன் குதிரையைத் தட்டி விட்டான். தான்மட்டும் தனியே கோட்டையை நோக்கி விரைந்தான். பரிவாரங்களோ பின்னே மெதுவாக வாராநின்றன.

'கோட்டையின் பழைய தலைவன் கொரேனாயிற்றே. பதவியை இழப்பதில் அவனுக்குப் பரிபவம் மிகுந்திருக்கும். நம் மனைவியையும் மக்களையும் எங்ஙனம் அவன் வரவேற்றனனோ? எத்தகைய வசதி தேடித் தந்தனனோ? இதனை முன்னதாகவே மதித்த உணர்ந்தோம் இல்லையே. மதிபிசகி அனுப்பிவிட்டோமே' என்று கவன்ற அவன் மனம் கோட்டையை நோக்கி விரைந்தது. குதிரையும் அவன் மனோவேகத்துடன் போட்டியிட்டது. மழையும் இடியுமோ அவனை இன்னும் துரிதப்படுத்தின. மனைவிமீதுள்ள காதலும் அன்பும் பிடரியைப் பிடித்துத் தள்ளின.

சடுதியில் அக்கோட்டை சேர்ந்தான் அவன். மாளிகைமீது ஏறினன். அறையில் புகுந்து பார்த்தான். சயன அறையிலே மக்கள் இருவர்மட்டும் அயர்ந்து உறங்கியிருந்தனர். மனைவியையோ காணவில்லை. கதவோ

திறந்துகிடந்தது. படபடப்புடன் அம்மாளிகையின் திறந்தவெளியில் புகுந்தான் அவன். தீபம் ஏதும் இன்றித் தனியே நடந்தான். இருளிலே நுழைந்தான். திடீரென்று மின்னல் தோன்றியது. கங்காவும் நேதாவும் இருந்த நிலை கண்டான், தொலைவிலே!

"இவளா கங்கா! இவளா என் மனைவி! இவளா கற்புடையாள்! நள்ளிரவிலே அயலானைத் தழுவி நிற்கிறாளே. இதற்கு, இத் துரோகச்செயலுக்கு, இருவர் உடந்தை! மாலையிட்டு மணந்தோம்; மகிமையாக வாழ்ந்தோம்; நம்மைப் பசப்பி மயக்கி விட்டாள் இப்பாவை. நாமும் மதி மோசம் போனோம். நல்லது. இவ் வேற்று மனிதனை உடனே ஆவி கவர்வோம்" என்று உடைவாளை உருவிக் கொண்டு உறுமி வந்தான் ஒட்டமாக!

அந்த உறுமல் கேட்டு, "என் ஐயனே, என் தலைவா! இவன் என் சோதரன். என்னை நீங்கள் வழிமறித்துக் கவர்ந்த அந்நாள் என்னைக் காத்து இருநிலத்தில் குற்றுயிராய் விழ்ந்தான். தங்கள் கருணையால் உயிர்ப்பிச்சை பெற்றான். இன்றேல், வெறிபிடித்த முல்லாவின் வாளுக்கு அன்றே இரையாகியிருப்பான். அன்று இவனைக் காத்தீர். இன்றும் இவனைக் காத்தல் வேண்டும்" என்று கங்கா கதறினாள். கணவனது காலடியில் வீழ்ந்தாள்; மூச்சற்றுப் போனாள்.

ருஸ்தம் என்னும் அம் முகம்மதியன் - புதிதாகச் சதாரா கோட்டையின் காவலனாக வந்தவன் - அக்கணமே தன் உடைவாளை உறையில் செருகினான். "கங்கா! கங்கா! கலங்காதே! என்று கதறினான். ஆராயாமல் ஆத்திரங்கொண்டேனே" என்று அலறினான். "அடியேனை ஆதரித்து அன்பு காட்டவேண்டும்" என்று ஆற்றினான்.

மேலே குந்தி அவளை மெதுவாகத் தடவிக்கொடுத்தான்! அவளுக்கோ நினைவு சிறிதும் வரவில்லை.

உடனே அவளை நேதாஜியின் உதவிகொண்டு, வாரி எடுத்து, மார்பில் தாங்கியவண்ணம் மாளிகை சேர்ந்தான் ருஸ்தம்கான். மழைக்கால் இருட்டிலே புறப்பட்ட பரபரப்பு, கன்னிப்பருவம் முதல் காணாத சோதரனைக் கண்ட பரவசம், கடுங்கோபத்துடன் உடைவாளை உருவி வந்த கணவனைக் கண்ட திகைப்பு, தன் கற்பினுக்கு மாசு பேசிய மணாளனது மனப்போக்கு இவைகளெல்லாம் கங்கையை நினைவற்றுப்போகச் செய்துவிட்டன.

இரவு முழுதும் தாதியரும் கணவனும் சோதரனும் சைத்தியோபசாரம் செய்தனர், கங்காதேவிக்கு. அவளுக்கோ இம்மியும் பிரக்ஞை பிறக்கவில்லை. உயிர் உளதோ இல்லையோ என்று எல்லோரும் அஞ்சி நடுங்கினர். தங்கையைப் பறிகொடுத்த அன்றையினும் நெட்டுயிர்ப்புக் கொண்டான் நேதாஜி. அருமந்த தேவியை, அன்பின் களஞ்சியத்தை, இழக்க நேருமோ என்று ருஸ்தம்கான் ஆறாத் துயர்கொண்டான்.

மறுதினம் அதிகாலையிலே கங்கை சற்றே கண்திறந்தாள். "நேதையா! அண்ணா! உயிருடன் இருக்கிறாயோ?" என்று கூறிக் கண்மூடினாள். சிறிது நேரம் சென்றதும், மீண்டும் கண்திறந்து, "என் கணவ, என் துணைவ, கோபம் தணிந்தனையோ?" என்று தழதழப்புடன் பேசினாள். அவ்வுரை கேட்டபின்னரே, கங்காதேவிக்கு உயிர் உளது என்று அனைவரும் ஆறுதல் அடைந்தனர்.

"கண்ணே! கருத்தழிய வேண்டாம். உன்னைக் கட்டிக் காக்க இருவரும் காத்துளர். கவலை விடுக. இதோ பார் உன் குழந்தைகளை; அவை கண்ணீர் வடிக்கின்றன. கண் திறந்து பார்" என்று களித்துரைத்தாள் தாதி.

# 12

## அண்ணனும் தங்கையும்

இரவு கழிந்தது. கங்காவின் மயக்கமும் தீர்ந்தது. அதுகண்டு, கணவனும் சோதரனும் களிப்புக் கொண்டனர். பின்னர், ருஸ்தம் அக் கோட்டையின் காவலன் என்னும் பதவி ஏற்றான். ஆயினும், பீஜப்பூர் சுல்தானது உத்தரவின்றி, நேதாஜியை விடுவிப்பது எங்ஙனம். அந்த உத்தரவு கிட்டும்வரையில் சிறையாளனாகவே நேதாஜி நடந்துவர நேர்ந்தது.

என்றாலும், சிறையறையில் நேதாஜி கிடக்கவில்லை. 'கோட்டைக்குள்ளேயே இருக்கவேண்டும்' என்று ஏற்பாடாயிற்று. அதனால் தங்கையுடன் சுதந்தரமாகப் பேச அவனுக்குச் சமயம் வாய்த்தது. அவ்விருவரும் பின்வருமாறு பேசியிருந்தனர்.

"கங்கா, யாது காரணம்? நீ உயிருடன் இருப்பதாக எங்களுக்கு இன்றளவும் அறிவிக்கவில்லையே ஏன்?"

"அண்ணா, அவமானமே காரணம். மகாராஷ்டிர மரபில் பிறந்து, முகம்மதியனுக்கு மனைவியாக வாழ்தல் மானக்கேடன்றோ. இதனை நீங்கள் அறிவதினும், யான் இறந்துபட்டதாகவே எண்ணிக்கிடத்தல் மேலன்றோ?"

"ஆம் கங்கா, மாற்றானுக்கு மாலையிட்டு வாழ்தல் மானக்கேடுதான். அங்ஙனம் இருக்க, ஆருயிரை மாய்த்துக் கொள்ளாமல், அவமானத்துக்கு ஆளாகிக் கிடந்தது ஏன்?"

"நேதையா! என் உயிரை மாய்த்துக் கொள்ளவே ஒரு சமயம் விரும்பினேன். குத்திக்கொண்டு குலேய, ஈட்டி ஒன்றையும் எடுத்தேன். கோழைத்தனம் வந்து தடுத்து விட்டது. அண்ணு, அண்ணு, அபலே ஆனேன். அறிவு கெட்டேன், மன்னிக்கவேண்டும். வேறு என்ன சொல் வேன்?"

"நல்லது! நேற்று இரவுமட்டும் நீ மிக்க தைரியங் கொண்டது ஏன்?"

"இல்லே அண்ணு; தைரியமா கொண்டேன்? எவ்வ ளவோ தயங்கினேன்; தேம்பினேன்; இருட்டிலே நடக் கும்போது, எவ்வளவு பயந்தேன் தெரியுமா? இடியோசை கேட்டதும் இடிந்து போனேன். மின்னல்ஒளி கண் டதும் மயக்கம் கொண்டேன். நெடுக அச்சத்திற்கு ஆளாகியே உழன்றேன். ஆயினும், கருணை என்பது என் னிடம் விஞ்சிநின்றது. ஆதலால் சிறையில்கிடந்து உழலும் ஒருவனை - என் அண்ணு என்று அறிந்தேன் இல்லே -விடு விக்கவே விரைந்தேன், வேறன்று. நான் கோழைதான். உயிரைப் போக்கிக்கொள்ளத் துணியவில்லே என்று கூசாமல் உன்னிடம் பேசுகிறேன்" என்ருள்.

அவ்விதம் பேசியதும், தலேயிறக்கங் கொண்டாள் கங்கா. கண்களிலிருந்து நீர்த்துளிகள் முத்தேபோல் கீழே விழுந்தன. அதுகண்டு நேதாஜி பொறுக்கவில்லே.

"தங்காய்! தேம்பாதே. போனது போகட்டும். எல் லாம் ஆண்டவன் செயல். மானிடரின் செயல் எம்மாத் திரம்?" என்று தேற்றினன்.

"அண்ணு, ஈசன் செயல்தான்! அன்று என்னேக் காத்துப் பல்லக்கில் தூக்கிச் சென்ற ருஸ்தமைக் கண்டு என் மனம் இளகிவிட்டது! என் தமையனது உயிரைக்

காத்தான். என்ன கைம்மாறு செய்யலாம் என்று நினைத்தேன். அவனது பெருந்தன்மை கண்டேன். என் மனம் உருகிவிட்டது. அவனும் என்னை உள்ளன்புடன் நேசித்தான். என் துயரைத் துடைத்தான். தண்ணளி காட்டினான். தனிமையில் நின்ற நான் தளர்ந்துவிட்டேன். இன்னும் கேள். நான் அவனை மணந்தது மெய். ஆனால் என்னை அவன் மதங்கெடுக்கவில்லை. பீஜபூரிலே எங்கள் மாளிகையில் அம்மை பவானிக்கு ஆலயம் ஒன்று சமைத்துக் கொடுத்தான். தினம் நான் அத் தேவியைத் தொழ எல்லாம் சேகரித்துத் தந்தான். ஆண்டவன் ஒன்றே என்றான். 'நாம் வேறுயினும் என்ன?' என்றான். உள்ளங் கையிலே வைத்து என்னைத் தாங்கினான். என் முகம் கோணாது நடந்துவருகிறான்."

"கங்கா, நீ கூறுவதெல்லாம் மெய்யே. ஆயினும் ராஜபுத்திர மாதரைப்போல் உனக்கு உயர்வீரம் உதிக்கவில்லை. அம்மாதரில் சிலர் மொகலாயரை மணந்தனர். நீயும் வேற்று மதத்தனை மணந்தாய்! அரசுபற்றி அவர்களுக்கும் நமக்கும் ஜன்மப் பகை. நம் குலத்தலைவன் சிவாஜியோ அவர்களின் கொடுஞ்செயல் கண்டு, கோபாவேசத்துடன் கொதிக்கிறான். இருவருக்கும் இடையேயுள்ள பகை எப்போது தணியுமோ அறியேன். நம் சொந்த நாட்டில் அவர்களுக்கு அதிகாரம் இருப்பதோ? அரசும் இருப்பதோ?"

"அண்ணா! அனைத்தும் அறிவேன். மதிப்பிசகு, கோழைத் தனம், இளகிய நெஞ்சம், தனித்த நிலை! மன்னிக்கவேண்டும்."

இவ்விதம் இருவரும் நெடுநேரம் பேசிநின்றனர். அப்போது, தான் சிறையுண்ட விதத்தை நேதாஜி விரித்து

உரைத்தான். உரைத்தது கேட்டு, அவள் உள்ளம் ஊசலாடியது. அவ்வேளை, ருஸ்தம் தோன்றினன். விடுதலைக்கு விழுமிய உபாயம் ஒன்று உளது என்று உவகையுடன் கூறினன். 'உபாயம் யாது?' என்று வினவினள் கங்கா.

"கண்ணே! நம் சுல்தானது மைத்துனன் சிவாஜியிடம் சிறைப்பட்டுக் கிடக்கிறான் அல்லவா? அவனை எங்ஙனமேனும் விடுவிக்கவேண்டும் என்று சுல்தான் துடிக்கிறான். சுல்தான் மனைவியும் அப்படியே துடிக்கிறாள். 'அம்மைத்துனனுக்கு மாற்றாக நேதாஜியை விடுவிக்கலாம்' என்றேன். சுல்தான் அதுகேட்டுச் சொக்கிவிட்டான். சிவாஜியிடம் தூதர் போயுளர். பதில் வருவதுதான் தாமதம். வீர நேதாஜி உடனே விடுதலை பெறுவான்; அம் மைத்துனனும் சிறைவீடு பெறுவான்."

சிவாஜியின் சம்மதி வந்தது. உடனே நேதாஜி விடுதலை பெற்றான். பின்பு கணநேரமும் சதாராவில் அவன் தாமதிக்கவில்லை. கங்காவிடம் விடைகொண்டு நேரே புனா நகரம் சென்றான். சிவாஜியைக் கண்டு சேவித்தான். சேவிக்கவே உயிர்பெற்ற உடல்போல் பூரித்தான் சிவாஜி. ஜீஜாபாயும், 'மகனே வருக, மைந்த வருக' என்று கட்டித் தழுவினள் வீரன் நேதாஜியை.

அன்றிரவு நேதாஜிக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. தங்கை கங்காவின் நினைவு அவனை எப்பொழுதும் வாட்டியது. கடைசியாகக் கங்காவுடன் பேசியதை எல்லாம் அவன் எண்ணிப்பார்த்தான். மனத்தூடே புலம்பத் தொடங்கிவிட்டான்.

"கங்கா! கங்கா! நீ மாண்டுவிட்டாய் என்றே மதித்திருந்தோம்! நீயோ புறச் சமயத்தானது மனைவியாக

வாழ்கிறாய். அச் சமயத்தாருடன் நாங்கள் மல்லுக்கு நிற்கிறோம். உன் மணாளனும் எங்கள் பகைக் கும்பலில் சேர்ந்தவன் அன்றோ. 'பின்னால் விபரீதம் விளையும்; என்னுடன் வந்துவிடு' என்று உன்னை அழைத்தேன். நீயோ உன் பதியைவிட்டுப் பிரிய மனங்கொள்ளவில்லை. 'அவனைக் கைவிட்டு வரினும், எங்ஙனம் உங்களுடன் வாழ்வது?' என்று இசைத்தாய். 'மாற்றானுடன் வாழ்ந்தவள் பிறந்தகத்தை நச்சி அவனைத் துறந்துவந்து இங்கே வாழ்கிறாள்' என்று உலகம் ஏசும் என்றாய். 'அன்னியனுக்குப் பெண்டான மாசு இருக்க, அவனைத் துறந்துவந்து வாழும் மாசினையும் கட்டிக்கொள்வதா?' என்று மறுகினாய். என்ன தர்மசங்கடம் இது? நீ அங்கே வாழ, நாங்கள் இங்கே மனம் ஒப்பி இருத்தல் எங்ஙனம்? கோழையாகிவிட்ட உன்னை அச் சதாரா நகரிலேயே கொன்று குவிக்கக் கருதினேன். பாசம் தடுத்துவிட்டது. உன்னைக் கோழை என்கிறேன்; நான் அன்றோ கோழை! ஒன்று உன்னை அன்றே கொன்று குவித்திருக்கவேண்டும். அல்லது உன் நினைப்பை அறவே மறக்கவேண்டும். இரண்டில் எதுவும் இயலவில்லை. என் செய்வேன்; பாவியேன்? இனி உன்னை என் வாளுக்கு இரையாக்கவும் எண்ணினேன். எண்ணிய காலையில் என் விடுதலையை உன்னினேன். நீயே காரணம் என்று கண்டேன். மீண்டும் தேசப் பணிபுரிய, எங்கள் குலவிளக்கான சிவாஜிக்குச் சேவைபுரிய, எனக்கு வழி தேடித் தந்த உன்னையா கொல்வது? என்று கூசினேன். என்ன பாவம் இது? என்ன முரண்பாடு இது? தேச கௌரவம் ஒரு பக்கம்; சோதரி என்ற பாசம் ஒரு பக்கம்; மாற்றானுக்கு மாலையிட்டாளே என்னும் ஆத்திரம் ஒரு பக்கம்; தேச சேவைசெய்ய விடுதலை தேடித் தந்தாளே என்பது ஒருபக்கம். நானோ வீரன்! நானோ சூரன்! நானோ கங்கா

வுக்கு உபதேசம் செய்பவன்! கண்ணே! கங்கா! உன்னை இனி எப்போது காண்பேன்; காணவும் சமயம் வாய்க்குமோ? உன்னை மீண்டும் காண்பதா? என்ன பேதமை இது. நீயோ தேச விரோதி. உன்னைக் கனவிலும் கருதுவது தவறு. என்றாலும் ருஸ்தமை நான் மறக்கமுடியுமோ? என்னிடம் பேரன்பு காட்டினான் அவன்; பேருபசாரம் புரிந்தான். நெடுந் தூரம் வந்து வழியனுப்பினான். பகைக் குழுவைச் சேர்ந்தவனாயினும், பெருந்தன்மையான புருஷன்! எல்லாம் உன்பொருட்டா? உயரிய நடையா? யாதாயினும் என்ன? யாவரிடமும் உயர்குணத்தை மதிக்க வேண்டும்.''

இப்படி நேதாஜி புலம்பித் தவித்தபின்பு, அனைத்தையும் மறந்தான். சிவாஜிக்கு அரிய சேவைசெய்யலானான். 1657 - ஆம் ஆண்டு, அவனே சிவாஜியின் சேனாதிபதி ஆயினன். அன்றுமுதல், தக்காண முகம்மதிய அரசுகளுடனும் மொகலாய அரசுடனும் அவன் ஆற்றிய போர்கள் கணக்கில் அடங்கா! 'சிவாஜியை ஒரு சமயம் மடக்கினாலும் மடக்கலாம்; நேதாஜியை மடக்க ஒண்ணாது' என்று பகைப்படையின் தளகர்த்தர் பலரும் அஞ்சி அறிவழிந்தனர்.

சிவாஜியின் மந்திராலோசனை சபையில் நேதாஜிக்கே முதல் ஸ்தானம். நேதாஜியின் சம்மதமும் துணையும் இன்றி ஏதும் செய்யான் சிவாஜி. தாய் ஜீஜாபாயிடம் சிவாஜிக்குப் பக்தி விசுவாசம் மிகுதி என்றால், அதற்கு அடுத்தபடி நேதாஜியிடந்தான்.

மொகலாய சக்கரவர்த்தியான ஔரங்கசீப் என்பான் சிவாஜியை அடக்க எத்தனையோ தளபதிகளை அனுப்

பினன். எண்ணிறந்த வீரர்களை ஏவினன். எல்லோரும் அடிபட்டும் உதைபட்டும் திரும்பினர். ஒருவராவது வாகை சூடவில்லை. சிவாஜிக்கு இத்தகைய கௌரவம் தேடித்தந்தவன் நேதாஜியே.

முடிவாக அந்த ஔரங்கசீப்போ, ஜயபுரிவேந்தன் ஜயசிம்மனை அனுப்பினன், ஒரு பெரும் படையுடன். போர் மிக்க மும்முரமாக நடந்தது. மொகலாயப்படை வெற்றிகொள்ள முடியவில்லை. அந் நாளில், ஈடில்லாச் சேனதிபதியாகத் திகழ்ந்தவன் ஜயசிம்மனே. அத்தகைய ஜயசிம்மனும் போர்முகத்தே சோர்ந்தான் சிவாஜியின் முன்பு! அப்போது, 'சிவாஜியின்பக்கம் நேதாஜி என்பான்மட்டும் இல்லாதுபோயின் சிவாஜியை ஓர் இமைப்பொழுதில் சிறைசெய்து விடுவேன்' என்று ஜயசிம்மன் பிரலாபித்தான்.

முடிவில் இணையில்லாத் துணைவலியும், ஈடில்லா மனவலியும் மதிவலியும் படைத்த சிவாஜிக்கும், மொகலாய அரசுக்கும் நட்புரிமை உண்டுபண்ண விரும்பினன் ஜயசிம்மன். அதுபற்றியே, மொகலாய அரசவைக்கு விஜயஞ்செய்யுமாறு சிவாஜியை வேண்டிக்கொண்டான். அவன் வஞ்சகன்; அவன்பால் செல்லின், விபரீதம் விளையுமே?' என்றான் சிவாஜி. 'விபரீதம் விளையின், அதனின்று மீட்டல் என் கடன்' என்று வாக்களித்தான் ஜயசிம்மன்.

அவ் வாக்குறுதிமட்டும் அன்று; எத்தகைய விபத்தாயினும், விடுபட்டுவர ஆற்றல் உண்டு, அறிவும் உண்டு என்று புலப்படுத்தவே, மொகலாய ராஜசபைக்குச் செல்லச் சிவாஜி சம்மதித்தான். அவ்விதம் செல்லுகையில், மகாராஷ்டிர அரசை யாரிடம் ஒப்படைத்துச் செல்வது? தாயுடன் ஆலோசித்தான் தனி மைந்தன் சிவாஜி. "நம் நேதாஜி

இருக்கிறனே! அவனே ஏற்றவன்" என்றுள் ஜீஜா பாய். அங்ஙனமே அரசனைத்தையும் நேதாஜியின் பாது காப்பில் விட்டுச்சென்றுன் சிவாஜி.

வடக்கே மொகலாய அரசவையான ஆக்ரா சென்ற தும், ஔரங்கசீப் அதிதந்திரமாக வீர சிவாஜியைச் சிறை செய்தான். விதியின்றி அவ் வேந்தர்பிரானும் சிறையில் கிடக்கலானுன். அவ்வேளை ஔரங்கசீபின் தூதுவர் நேதாஜியிடம் சென்றனர்.

"வீரர்க்கு வீர! வந்தனம். இனிமேல் சிவாஜி திரும்பி வாரான். ஆனைவாயில் போன கரும்புபோல்தான். ஔரங்கசீபின் சிறையினின்று அவன் உயிருடன் தப்பு வது ஏது? எனவே, இனி, நீயே மகாராஷ்டிரத்துக்கு மன்னவன். சிவாஜி கொண்ட வெற்றிகளுக் கெல்லாம் நீயே காரணபுருஷன் அன்றே? ஆதலின், ஆண்டவனே பார்த்து, அவனுக்குச் சிறைவாசம் கொடுத்து, உனக்கு அரியாசனம் அளித்திருக்கிறுன்! சக்கரவர்த்தி என்னும் தன்மையில் உனது அரசுரிமையை அங்கீகரித்து, ஔரங் கசீப் அனுப்பிய ஆடையணிகள் இவை; பட்டம் விருதுகள் இவை" என்று பிரமாதமாக அவர் பேசினர்.

ஒரு சமயம், சிவாஜி தப்பிச் சென்றுலும் அரசுரிமை அவனுக்குக் கிட்டாவண்ணம் செய்வதே மொகலாயரின் சூழ்ச்சி. அதுபற்றியே நேதாஜியை வசஞ்செய்ய எவ்வளவோ பசப்புவார்த்தை பேசிப் பார்த் தனர். இதற்கு யாது பதில் தந்தான் நேதையா?

"பேதைகாள்! உங்களுக்குத்தான் அறிவில்லை என் ருல், உங்கள் இறைவனுக்குமா அப்படி! சிவாஜியின் நாட்டிலே துரோகம் தலையெடுக்குமோ? நேதாஜியா

வஞ்சனை புரிவான்! அரசுக்கு ஆசைப்பட்டு இவன் அறிவிழப்பான் என்று எண்ணினீர்கள் போலும். சோதரரைக் கொன்று, அப்பனைச் சிறைசெய்து, பட்டம் ஏறிய புத்தி! பிறரை மயக்கப் பார்க்கிறான், அம்மன்னன். சிவாஜி போய்விட்டால், மகாராஷ்டிரம் மண்டியிடும் என்பது உங்கள் நினைப்போ? மண்டி எழும், மொகலாய அரசைப் பிளந்து எறியும் என்பது உங்களுக்கு ஞாபகம் இருக்கட்டும். தர்ம யுத்தமே புரிந்து வருகிறான் எங்கள் வேந்தன் சிவாஜி. அவனுக்கு ஏதேனும் ஊறு நேரின், உங்கள் இறைவனும் அரசும் படாதபாடு பட்டாகவேண்டும். நேதாஜியோ பன்மடங்கு மூர்க்கமாகப் போரை நடத்துவான். மகாராஷ்டிர மண்ணை மிதித்தோரும் துரோக சிந்தனை கொள்வரோ? யாரைப்பார்த்து, என்ன வார்த்தை பேசினீர்?"

அவ்வுரை கேட்டதும், வந்த தூதுவர் வாயிழந்து வாடிய முகத்துடன் திரும்பினர். பின்பு, மொகலாயரிடம் சிறைப்பட்ட சிவாஜி வெளிக்கிளம்பினான் தந்திரமாக. வெளிக்கிளம்பவும், வெளிக்கிளம்பிப் புனா நகரம் வந்து சேரவும், வேறு எவரும் அறியாவண்ணம் ஆங்காங்கே ஒற்றரை நியமித்து, ஒப்பற்ற உதவி புரியும் வண்ணம் வகை துறை எல்லாம் செய்தவன் நேதாஜியே!

சிவாஜி தவக்கோலத்துடன் புனா திரும்பியதும் முதலில் தாயை வணங்கினான். அடுத்தபடியாக ஆருயிர் அன்பன் நேதாஜியைக் கட்டித் தழுவினான்! மகாராஷ்டிரரின் எழுச்சி என்னும் அரியநூல் எழுதிய நீதிபதி மகாதேவ கோவிந்த ரானடே என்பார் கூறும்வண்ணம், சிவாஜியின் சேனையிலே தலைசிறந்தவன் நேதாஜி! தனக்குத்தானே நிகரானவன் நேதாஜி! தணியா வீரம் படைத்தோன்

நேதாஜி! ஆபத்தான யுத்தம் என்ருல் முன்னணியில் மார் தட்டி நிற்பவன் நேதாஜி. அசையாத கோட்டை, அழியாத கோட்டை பிடிபட வேண்டுமென்ருல், அணிவகுத்துக் கிளம்புபவன் நேதாஜி. சிவாஜிக்கு ஆபத்து என்ருல் தலை கொடுப்பவன் நேதாஜி. நேதாஜியின் துணைகொண்டே எங்கும் வெற்றிமாலை சூடினன் சிவாஜி! வீரப் பிரதாபத்தையும் விளங்கவைத்தான்!

முற்றும்

# புதிய வெளியீடுகள்

**குழந்தை உள்ளம்** ரூ. 2/-

*ம. ப. பெரியசாமி*

குழந்தைகள் அடிக்கடி அழுகின்றன, அடம் பிடிக்கின்றன, பயந்து நடுங்குகின்றன. குழந்தைகளோடு பல ஆண்டுகள் பழகிய இந்த ஆசிரியர் குழந்தை உள்ளத்தின் வளர்ச்சியைப் படிப்படியாக விளக்கி இந்த நூலை உரிமையோடு எழுதியிருக்கிறார்.

**மூவர்** ரூ. 2/8

*ரவீந்திரநாத் டாகுர்*

ரவீந்திரர் பலகாலத்துக்குப் பிறகு இந்த மூன்று நீண்ட கதைகளை எழுதினார். இவைகளில் அவர், மேல்நாட்டு நாகரிகமும் கீழ்நாட்டு நாகரிகமும் மோதுண்டதால் ஏற்பட்ட விளைவுகளை ரஸமாகச் சித்திரிக்கிறார். த. நா. குமாரஸ்வாமி மொழிபெயர்த்தது.

**காந்தம் (இரண்டாம் பதிப்பு)** ரூ. 2/8

*கா. ஸ்ரீ. ஸ்ரீ.*

"இந்தப் பிரச்னையைக் கிளப்பிவிட்டதற்கு நான் அவரைப் பாராட்டுகிறேன்" என்று பெரிய விமரிசகர் ஒருவர் இந்த நாவலைப்பற்றி எழுதுகிறார். மண வாழ்க்கையிலுள்ள ஒரு முக்கியச் சிக்கலை இது விவரிக்கிறது.

**12-ஆம் நம்பர் பஸ்** ரூ. 2/8

*கா. வி. பட்கே*

தாசியை மணந்துகொண்ட ஒரு பிரபுவுக்கு ரத்தினமான பெண் ஒருத்தி பிறக்கிறாள். வறுமையில் வருந்திய அவள் ஒரு வாலிபனைச் சந்திக்கிறாள். பின்பு நேர்ந்த நிகழ்ச்சிகளை 12 நெ. பஸ் சொல்லுகிறது. தமிழாக்கியவர்: கோ. ரா. புணதாம்பேகர்.